Kmm0275

ஓம்
திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்
திங்கள்தோறும் வெளிவருவது.

| சிலம்பு ய | மெய்கண்டான் யாண்டு-ஏாய ஐப்பசித் திங்கள் 1932ஞ அக்டோபர்மூ—நவம்பர்மூ | பரல் ய |
|---|---|---|

திருச்சிற்றம்பலம்

## திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்

விரிவிலா வறிவினர்கள் வேறொரு சமயஞ் செய்து
எரிவினாற் சொன்னா ரேனு மெம்பிராற் கேற்றதாகும்
பரிவினாற் பெரியோ ரேத்தும் பெருவேளூர் பற்றினானை
மருவிநான் வாழ்த்தி யுய்யும் வகையது நினைக்கின்றேனே.

பதவுரை:—

விரிவிலா அறிவினர்கள்—விரிந்தும் (ஆழ்ந்தும்) அறியுந்திறனில்லாதவர்கள்
வேறொரு சமயம் செய்து—(விரிவும் ஆழமு முடைய சைவசமயத்துக்கு) வேறாக (விரிவும் ஆழமுமில்லாத) மற்றொரு சமயத்தைப் புதிதாக அமைத்து
எரிவினால் சொன்னாரேனும்—சைவசமயத்தின்மேல் வைத்த பொறாமையினால் (உலகிலுள்ள மக்களுக்குக்) கூறினாராயினும்
எம்பிராற்கு ஏற்றது ஆகும்—(அச்சமயம்) எமது தலைவனாகிய சிவபெருமான் ஏற்றுக்கொள்ளுவதற்கு உரியதாகும்.
பரிவினால்—உண்மை அன்புடன்
பெரியோர் ஏத்தும்—காமம், வெகுளி, மயக்கம் என்னும் மூன்று குற்றங்களையும் கடிந்த பெரியோர்கள் துதிக்கின்ற

பெருவேளூர் பற்றினனை—திருப்பெருவேளூர் என்ற தலத்தில் கோயில் கொண்டருளியிருக்கும் சிவபெருமானை

நான் மருவி வாழ்த்தி—நான் அடைந்து (மனதினால் நினைத்தும்) வாயினால் வாழ்த்தியும் (மெய்யினால் பணிசெய்தும்)

உய்யும் வகையது—பிறவித் துன்பத்தினின்று நீங்கிப் பிழைக்கும் வழியை நினைக்கின்றேன்—என் மனதிலே நினைக்கின்றேன்.

விளக்கவுரை:—

விரிவிலா அறிவினர்கள்—விரிவறிவு என்பது எவ்வுயிரையும் எப்பொருளையும் விரும்புதலும் வெறுத்தலுஞ் செய்யாது அவ்வவ்வுயிரின் அறிவு நிலையையும் அவ்வப் பொருளின் தன்மையையும், உள்ளத்தில் எதிர்ப்பின்றி அமைதியுடன் அறியும் அறிவு. இனம்பற்றி ஆழ்ந்த அறிவும் கொள்ளப்படும். ஆழ்ந்த அறிவு என்பது காய்தலுவத்திலின்றித் திறந்த வுள்ளத்தோடு ஆராயும் அறிவு. இந்த விரிவும் ஆழமுமுடைய அறிவு இறைவன் அறிவுடன் கலந்து தெள்ளிய அறிவை (Intuition) உண்டுபண்ணுதற்குக் கருவியாயிருக்கும். விரிந்தும் ஆழ்ந்துமுள்ள அறிவு (Breadth and Depth of Understanding) விரிவும் ஆழமுமுள்ள அறிவுடையவர்கள் எல்லாச்சமயங்களிலும் வியாபகமாயுள்ள சைவசமயத்தில் ஏனைய எல்லாச் சமயங்களும் அதற்குச் சகோதர சமயங்களாய் அமையும் என்று அறிவார்களாதலின் அவர்கள் வேறொரு சமயத்தைச் சொல்லமாட்டார்கள் என்பது பற்றி ‘விரிவிலா அறிவினர்கள்’ என்றார். எரிவு=சூட்டினால் உடல் காந்தல் (burning sensation); அஃது இங்கே மனக்காந்தலாகிய பொறாமையைக் குறிக்கின்றது. சினம் என்று பொருள் கொள்ளினும் பொருந்தும். எம்பிராற்கு ஏற்றதாகும்=எம்பிரான்+கு=(நான்காம் வேற்றுமை உருபு) எம்பிராற்கு.

சைவசமயத்துக்கு வேறாக ஒரு சமயத்தைச் சொல்லுகிறவரும் தம்மைப் போன்ற அறிவுநிலையிலுள்ள மக்கள் முன்னேற்றம் அடைந்து உய்யுமாறு இன்னவை ஒழுகத்தக்கவை இன்னவை விலக்கத்தக்கவை என்ற விதியும் விலக்கும் விதிப்பார் ஆதலின் அவ்விதிக்கும் விலக்குக்கும் உட்பட்டுப் புலனடக்கஞ் செய்து ஒழுகுகிறவர்கள் தாங்கள் நிற்கும் நிலையிலிருந்து மேல் நிலையை அடைவாராதலாலும், மக்கள் படிமுறையில் மேல்நிலையில் அடையுந்தன்மை யுடையவர்களாதலாலும், மக்கள் சிவபெருமானை முடிவில் அடைதற்கு ஞோனபடிகளையுங் கடந்து செல்லுதல் இன்றியமையாததாதலினாலும் ‘எம்பிராற்கு ஏற்றதாகும்’ என்றார். பற்றினனை=பற்றுதல்—உயிர்கள்மேல்வைத்த அருளினால் திருக்கோயில் கொண்டருளுதல்.

வாழ்த்தி—வாழ்த்துதல்—சிவபெருமானுடைய புகழை வாயினாற் கூறி

வாழ்த்துதல். "இருள் சேரிருவினையும் சேரா இறைவன் பொருள் சேர்புகழ் புரிந்தார் மாட்டு" என்று திருவள்ளுவர் கூறியிருத்தல் காண்க. இனம்பற்றி மனத்தால் நினைத்தலும், மெய்யினுற் பணி செய்தலும் கொள்ளப்படும். மக்கள் பிறவித்துன்பத்தினின்று நீங்கி உய்யும் வழிகள் சிவபெருமானை மனத்தால் நினைத்தலும், வாயால் வாழ்த்துதலும், மெய்யினுற் பணிசெய்தலும் ஆகும். பயன் கருதாது உயிர்களுக்குச் செய்யும் பணியும் சிவபெருமானுக்குச் செய்யும் பணியாகும்.

திருநாவுக்கரசு அடிகள் இத்தேவாரப் பாட்டில் சைவசமயத்துக்கு இயல்பாக உரிய சமயப்பொறுமையைக் (religious tolerance) கூறியருளினுர். சைவசமயத்துக்குரிய சமயப் பொறுமை பலசமய மக்கள் வாழும் உலகில் ஒருவரோடொருவர் இணங்கிவாழ்தல் உலகநலத்துக்கு இன்றியமையாமை என்பது பற்றி யன்று, பலதார அறிவு நிலைகளையுடைய பலவகை மக்களுக்கும் பலதார அறிவுநிலைச் சமயங்களின் ஒழுகலாறுகள் அவர்களுடைய வாழ்க்கை முற்போக்குக்கு வேண்டப்படும் என்ற உண்மை முறைமை பற்றியாகும்.

மா. வே. நெல்லையப்ப பிள்ளை.

---

# தமிழ் அறிவியற் சொற்கள்

## **Geometry** - வடிவளவை

[திரு. பா. வே. மாணிக்கநாயக்க ரவர்கள்]

(முன் ௲கூஉ-ம் பக்கத் தொடர்ச்சி)

*Compass* ... பிளவு காலி
*Dividers* ... கூர்முனைப்பிளவு காலி
*Pencil Compass* ... குறிமுனைப் பிளவு காலி

Pencil Compass என்பதிலுள்ள Pencil என்னுஞ் சொல்லுக்குப் பொருள் குறிக்காதது ஏன் எனக் கேட்கலாம். ஈண்டுள்ள Pencil என்ற எழுதுகோலுக்கு எழுதும் வேலை யில்லையாகையாலும் அது செய்ய வேண்டியது ஒரு குறியேயாதலாலும் மேற்குறித்த பொருளே சாலும்.

Pen என்பது இறகு என்று பொருள்படும் Penna என்னுஞ் சொல்லின் றிரிபாகும். இதனுல் மேல் நாட்டிலும் முதன்முதல் இறகுகளே எழுது கருவிகளாகப் பயன்பட்டு வந்தன என்பது

பெறப்படும். இப்பொழுதோ Steel Pen (எஃகு எழுதுகோல்) Steel Feather (எஃகு இறகு) என்று வழங்குகிறது. இதனல் அச் சொல் இறகினாலாயது என்ற தன்னுடைய சிறப்புப்பண்பை இழந்து மையைத் தொட்டு எழுதுங்கருவி யென்ற பொதுப் பண்பையடைந்துள தென்பது எளிதில் விளங்கும். எழுது கருவி முனையிற் பிளவுபட்ட வாயை யுடையதாக இல்லாவிட்டால் எழுது வது முடியாதாகையால் பிளவுபட்ட தன்மையை விளக்கும் ஒரு சொல்லைத் தேடியமைப்பதே சொல்லாக்கத்திற்குரியதாகும். இறகி னாலோ, எஃகினாலோ மற்றெதனாலோ அக் கருவி இயற்றப்பட்டி ருப்பினும் அதை வெளிப்படையாக ஆக்கச் சொல்குறித்தல் வேண்டா. எனவே Pen என்பதற்குப் பிள்வாய் என்று தமிழில் சொல்லமைத்தலே ஏற்புடைத்து.

அறிவியலுக் கேற்றவாறு இனவியல்புகளை ஒருசிறிதும் மறவாதபடி தமிழ் முன்னோர்கள் சொல்ல மைப்பிலேயே புகுத்தி விட்டார்கள். கல்லிலும்செம்பிலும் கருத்துகளை வெட்டுவதையும், பிழைமலிந்த வரலாறுகளைக் கருத்துக்கியைந்தவாறு எழுதிவைப் பதையும்விடப் பண்டைக்கால உண்மைகளைத் தெரிப்பதற்கு நம் முன்னோர் கையாண்ட இச் சீரிய சொல்லாக்க முறை எத்துணைச் சிறந்ததென்று எழுதவுங் கூடுமோ? எடுத்துக்காட்டாக Nature என்ற ஆங்கிலச் சொல்லின் நேர்மொழியான இயற்கை என்பதை எடுத்துக் கொள்ளலாம். இச் சொல்லின் வேர்ப்பண்பு இடை விடாது இயங்கிமாறிக் கொண்டிருக்கும் ஒரு பெற்றியைக் குறிக் கும். இயற்கையின் இயற்கை இடைவிடா இயக்கம் என்ற உயர்ந்த தத்துவத்தை ஒரு சிறு சொல்லின் மூலம் யாவர்க்கும் எடுத்து விளக்க முன்வந்த எம் முன்னோர்தம் அறிவியலாற்றல் அளவிடற் பாலதோ?

ஒரு நண்பர் எளிதில் கோணமென்றும் முக்கோணமென்றும் திரிகோணமென்றும் சொல்லமைத்துக் கொள்ளாது, இடக்காக முடக்கு என்னும் சொல்லை Angle என்ற சொற்கு நேர் பொரு ளாகத் தேடி யமைத்ததேன் என்று உசாவினர். கோணம், முடக்கு என்ற இரண்டு சொற்களில் Angle என்பதிற்குரிய இனவியல்பைச் சற்றும் வழுவாது தெரிப்பதாயும் சொல்லாக்கத் திற்கு எத்துறையிலும் பயன்படுவதாயும் உள்ளது எது என்பதை நோக்கலாம்.

"அவற்றுள் தடவென்கிளவி கோட்டமுஞ் செய்யும்" (தொல்-சொல்-321) என்னும் சூத்திரத்திற்கு உதாரணங் கூறுங் கால் உரையாசிரியர்களான நச்சினார்க்கினியரும் சேனாவரையரும் கோட்டம் என்று பொருள்படக்கூடிய தடவென் சொற்களையே எடுத்துக் காட்டினர். (தடமருப்பெருமை-கோணற் கொம்பு எருமை மாடு)

சமஸ்கிருதத்திற்கு வடிவமும், இலக்கணமும் தாதுபதங்களும் ஏற்படாத ஒரு காலத்திலேயே, வியாசமுனிவரால் வேதங்கள் தொகுத்துப் பாகுபாடு படுத்தப்பட்ட ஒரு காலத்திற்கு முன்னரேயே, தொல்காப்பியம் எழுந்ததாகும் என மேற்குறித்த உரையாசிரியர்கள் இருவரும் எடுத்து மொழிந்துளார். அத்தகைய ஓர் நூலில் Bent என்னும் பொருள்படும் வகையிலும், Angle என்று பொருள்படாத வகையிலும் கோட்டம் என்னும் சொல் வழங்கப்படிருக்கிறது. கோண் என்னும் வேர்ச் சொல்லடியாகப் பிறந்ததே கோணல் என்பது. பின்னும் இச்சொல்லின் ணகரவீறு வல்லின மெய்களுடன் புணருங்கால் தன் இனவெழுத்தான டகரமாக மாறுகிறது.

கோண் + தடம் = கோட்டடம்
கோண் + கால் = கோட்கால்
கோண் + சினை = கோட்சினை
கோண் + பாதை = கோட்பாதை

கோண் என்பதற்கு எப்பொழுதும் வரையின்றி வளைந்தது என்றது பொருளேயன்றி angle என்பதற்குரிய முடங்கியது என்பது பொருளாகாது. கோணல், கோணிக்கொள், கோணை வாய், கோணைக்கத்தி, கோணைக் கொம்பு, கோணவெடுக்க, கோணல்விழ என்பவற்றை நோக்குக. கோண் + தம் கோட்டம்; அதாவது கோணலானது (Curvature.)

*Curvature* ... கோட்டம்.

வடமொழியிலிருந்து கோணம் என்ற ஒரு சொல்லைப்படைத்துக் கொண்டு அச்சொல் Angle என்பதற்கு நேர்பொருளாகும் என்று கூறுவது தற்கால வழக்காயிற்று. தமிழ்மொழிச் சொல்லான கோண் என்பது bend என்னும் பொருள் குறிக்கும்போது

வடமொழிப்பதமான கோண் என்பது Angle என்பதைக் குறிப்பதாகக் கொண்டது விந்தையே.

ஒரு சொல்லுக்கு நேர்மொழிச் சொல்லமைக்கப் புகுங்கால் நாம் அமைக்குஞ் சொல் நகைப்புக்கிடனின்றியும், வினையெச்சமாகவோ, பெயரெச்சமாகவோ, வினைச்சொல்லாகவோ மற்றெவ்வகையாகவோ எளிதிற் பயன்படுதற்குரியவாறும் கருத்துடன் நோக்கி யமைக்கப்பட வேண்டுமென்பது சொல்லாக்க முறையிற் சிறப்பாகப் பேணல் வேண்டிய தொன்றாகும். Fold your hand to make an angle of 45° degrees என்றால் "உன்கையை 45° திக்கிரிக்கு முடக்கு" என்று சொல்லாமல் "உன் கையை 45° திக்கிரிக்குக் கோணு" என்று பொருள் கூறுவதிலுள்ள எளைமை கூறாமலே விளங்கும்.

"முகத்தைக் கோணு" என்று கூறுதல் ஏற்றதாகும்; ஏனெனில் முகத்தில் சிறு கோணல்களைச் செய்து கொள்ளலாமேயன்றி திக்கிரிக் கணக்குக்கு முடக்கிக் கொள்ளல் ஏலாதாகலின். அற்றாயின் முகங்களைக் குறிக்கும் போதெல்லாம் கோணல் என்றுதான் கொள்ள வேண்டுமோ எனின், எல்லாவிடத்தும் அவ்வாறு கொள்வதற்கில்லை. மங்கோலியர்கள் முகங்களைக் குறிக்கும்போது "முடக்கு மூஞ்சி" என்று கூறுவதே உண்மை தெரிப்பதாமன்றி, "கோண மூஞ்சி" என்று கூறுதல் உண்மை தெரிப்பதாகாது.

எனவே Angle என்பதற்கு கோணம் என்ற சொல்லையே யமைக்க வேண்டுமாயின், அதனுடன் இன்னும் வேண்டிய வினைச்சொற்களைக் கூட்டியே, கோணத்தையாக்கு, கோணமாகச்செய், என்று சொற்கள் அமைக்கவேண்டுமேயன்றிக் கோணு என்று சொல்லமைத்தல் கூடாது. இவ்வாறு செய்தலோ Angle என்பதற்கு ஆங்கில் என்றே தமிழ்ச்சொல் அமைத்துக் கொள்வதையொக்கும்; என்னை ஆங்கிலையாக்கு, ஆங்கிலாகச் செய் என்றே கூறவேண்டுமாதலின்.

மேலும் "கோணமாக்கிய கால்" என்றால் Angle ஆகச் செய்த கால் என்று பொருள்படுமேயன்றி, "கோணித்தகால்" என்றால் அப்பொருள்படாமல் வளைந்தகால் என்றே பொருள் படும். இவ்விடர்ப்பாடின்றி "முடக்கியகால்" என்றால் திக்கி

ரிக்கணக்குக்கு முடங்கிய கால் என்று எளிதிற்பொருள் படாதோ? இன்னும் Triangle என்பதற்கு முக்கோணம் என்று பொருள் கூறுவர். முக்கோணம் என்பதில் மூன்று கோணங்கள் என்ற பொருள் கிடக்கின்றதேயன்றி மூன்று கோணங்களையுடைய ஒரு வடிவம் என்று பொருள் கிடைக்குமாறில்லை. "இ" என்ற ஒரு எழுத்தைச் சேர்த்தால் அப்பொருள் கிடைக்காதோ வெனின், முக்கோணம் என்பது முக்கோணி என மாறி முட்டுப்பட்டு நகைப்பை விளைப்பது கண்கூடு.

இதுகாறுங் கூறியவாற்றால் கோணம் என்ற சொல் கருதிய பொருள் குறியாமையும், சொல்லாக்கத்திற்கு எளிதிற் பயன்படாமையும் நன்கு விளங்குவதோடு முடக்கு என்று முன்னர்க்கொண்ட சொல்லே எத்துறையிலும் சாலச் சிறந்தது என்பதும் தெற்றென விளங்கும். இன்னும் விரிக்கிற் பெருகும்.

இனி, Diagonal என்பதற்கு மூலைவிட்டம் என்று பொருள் கூறாமல் முடக்குருவரை அல்லது முடக்குருவி என்று பொருள் கொண்டதேன் எனவுங் கேட்கலாம். பின்னையதைவிட முன்னது எளியதொன்றென்பதை யொப்புக் கொள்ளல் வேண்டும். ஆயினும் அது தமிழறிவியற் சொல்லாக்கத்துறையில் நாம் கொண்ட நோக்கமாகிய அறிவியற்பண்பை அகத்தடக்கி நிற்கும் சொற்களையமைத்தல் என்பதற்கு முரணுதலோடு அவ்வாறமைத்தலாலுண்டாகும் மதிப்பையும், சிறப்பையும் இழக்கச் செய்வதாகும்.

Diagonal என்பது Dia, Gona என்ற இரண்டு சொற்கள் சேர்ந்து உண்டாயது. Dia-ஊடே, Gona-முடக்கு, அதாவது, முடக்குகளின் ஊடே செல்வது. இக்கருத்தை எளிதில் தெரிப்பதே முடக்குருவி என்பதாகும். மூலவிட்டம் என்றாலோ நாம் குறித்த இரண்டு தாதுச் சொற்களுக்கும் பொருள் பெறாது நிற்கின்றமை யுணர்க. மேலும் Dia என்பது வடிவளவைபோன்ற கணிதத்திற்குரிய பலதுறைகளிலும் பெரிதும் விரவி வருவதோர் மரபுச் சொல்லாகும். ஓரிடத்தில் அதற்குரிய பொருளை நழுவவிடில் மற்ற இடங்களிலும் அதை நழுவவிடுமாறு தோன்றலாமாதலின் அது ஏற்புடைத்தன்று. Dia என்னும் தாதுவடியாப் பிறந்த சொற்கள் அறிவியலிற் பெரிதும் பயில்வனவாம் என்று மேற்குறித்ததை இரண்டொரு எடுத்துக்காட்டுக்களால் விளக்குவாம்.

*Diathermal* என்பது Dia + thermos (heat) அதாவது வெப்பத்தை ஊடே வெளிச்செலுத்துவது என்று பொருள்படும். அதாவது வெப்பம் உருவி விடும் அல்லது வெப்பம் உருவும். Diathermal materials are not suitable for the walls of a residence - வெப்பம் உருவும் பொருள்கள் குடியிருப்பு மனையின் சுவர்களுக்காகா.

*Diaphonic* என்பது Dia + Phone (sound) அதாவது ஒலியின் செலவினைக் குறிக்கது என்று பொருள்படும். ஒலி உருவவிடும் அல்லது ஒலி உருவும் என்பதே அதற்குத் தமிழ் நேர்ச்சொல்.

The diaphonic defects in a room causing echoes can be remedied by suitable decorative hangings—ஒரு விடுதியில் ஒலி உருவு குற்றத்தால் வரும் மாறொலியை அலங்கார தொங்கடங்களால் மாற்றி விடலாம்.

எனவே இத்தகைய ஏதுக்களை முன்னிட்டே நாம் முன்னர் *Pen* என்பதற்குப் பிள்வாய் என்று பொருள் கொண்டதாகும். எழுதுகின்ற முனை பிளந்ததாயிருப்பதே நாம் குறித்துக்கொள்ள வேண்டியதாகும். Dotting pen என்று புள்ளி போடுதற்குப் பயன்படுத்தும் ஒரு pen கூட முனையிற் பிளந்தவாயோடில்லாது போயினும் பிடியிலாவது மை யொழுகுவதற்கேற்றவாறு பிளவு டைத்தாயிருக்க வேண்டும்.

*Dot* என்பது புள்ளி; குற்று ஆகாது; ஏனெனில் குற்று என்பதற்கு நீளம் அகலம் ஆதிய அளவுகள் இல்லை; புள்ளி என்பதோ அவற்றை யுடைத்து.

| | | |
|---|---|---|
| *Pen* | ... | பிள்வாய் |
| Dotting pen | ... | புள்ளிப் பிள்வாய் |
| Chain dotting pen | ... | சங்கிலிப் புள்ளிப் பிள்வாய் |
| Drawing pen | ... | ஓவியப் பிள்வாய் ; |
| Double Pointed Nib | ... | இருமுனைப்பிள்வாய் |
| Treble Pointed Nib | ... | மும்முனைப் பிள்வாய் |
| Many Pointed Nib | ... | பன்முனைப் பிள்வாய் |
| Crow quill | ... | நுண்முனைப் பிள்வாய் (காக்கை இறகன்று) |

Reed pen ... நாணற் பிள்வாய்.

(எழுதுகோலும் பிள்வாயுஞ் சேர்ந்தே எழுதுங் கருவியாகின்றதாதலின் ஒவ்வொன்றிலும் கோல் எனச் சேர்த்தல் வேண்டா.)

Round writing nib ... வட்டெழுத்துப் பிள்வாய்
Broad pointed nib ... பருமுனைப் பிள்வாய்
Narrow pointed nib ... சிறுமுனைப் பிள்வாய்
Medium pointed nib ... சீர்முனைப் பிள்வாய்
Gold nib ... பொற் பிள்வாய்
Steel nib .... உருக்குப் பிள்வாய்
Knob ... முருடு
Knob pointed nib ... முருடுமுனைப் பிள்வாய்

Iridium என்பது Iris அல்லது வானவில் என்று பொருள்படும் ஒரு தாதுவினடியாப் பிறந்தது. அப்பொருளைக் கரைத்தால் அதன்கண் வானவில்லிற்குரிய பல்வகை நிறங்களுந் தோன்றுவதாலேயே அஃது அப்பெயர்த்தாயிற்றுப் போலும். வானவில்லுக்குரிய பல்வகை நிறங்களையும் பட்டையுருளை (Prism) யொன்றின் வழியாக ஒளிக்கதிரைச் செலுத்துவதால் பெறக்கூடும். ஆங்கிலத்தில் அதனுல் வானவில்லின் நிறங்கட்கு Prismatic Colours என்று பெயர் குறிப்பதுண்டு.

தமிழில் இத்தகைய பன்னிறங்களைக் குறிக்க இயற்கையாயமைந்ததோர் அழகிய சொல்லுண்டு. மயில் என்ற அழகிற் சிறந்த பறவையிடம் வானவில்லின் நிறங்கள் அனைத்தையும் ஒருங்கே காண்கிறோம். செம்பு சேர்ந்த பலகலவைகளிலும் இந் நிறங்களைக் காண்கிறோம். மயில் என்று தமிழிற் கூறினல் அது பன்னிறக் கலவையையே குறிக்கும். மயில் துத்தம் என்பது Copper sulphate; அதற்கும் பன்னிறமுள. இங்கே மயில் என்பது அப்பன்னிறங்களையே குறித்து நின்றது. சிற்றூர்களில் மயிலம் என்ற சொல் இன்றும் பல நிறங்களையே குறித்து வழங்கப்பட்டு வருகிறது. "செப்புக் கிண்ணத்திலிருந்த நெய் மயிலமாய்ப் போயிற்று". தெலுங்கு மொழியில் மயிலம், மயிலி என்ற இருசொற்களும் இன்னும் வழங்கி வருகின்றன, "மயிலிபடிந்தி" என்பது நிறம் மாறிற்று, பன்னிறமுற்றது என்பதையே குறிக்

கும். மயிலம் என்ற சொல்லை நாமும் கோடல் இயற்கைக்கேற்ற தாகும்.

Metal Silver ... வெண்பொன் (வெள்ளியன்று)
*Metal iridium* ... மயிலம் போன்
*Iridium* ... மயிலி
Iridium pen ... மயிலி முனைப் பொற்பிள்வாய்.

கா்ழி. சிவ. கண்ணுசாமி பிள்ளை B.A.

---

# பண்டைத் தமிழ்ச் சொற்கள்.

(திரு. மா. வே. நெல்லையப்ப பிள்ளை அவர்கள்)

## வள்ளல் (22).

வள்ளல் என்ற சொல் பண்டைத் தமிழ்மக்கள் கடவுளைக் குறிக்க வழங்கிவந்த சொற்களில் ஒன்று. அச்சொல்லில் அடங்கிய கருத்துக்களை இயன்றவாறு ஆராய்வாம்.

2. வள்ளல் என்பது வண்மை என்ற பண்புச்சொல்லடியாகப் பிறந்தசொல். வண்மை என்ற பண்புச்சொல், தன்னுடன் அல் என்ற தொழிற்பெயர் விகுதி சேர மை கெட்டு வள்ளல் என ஆகியது. வண்மை என்ற சொல் செல்வ மிகுதி என்று பொருள்படும். வண்மையுள்ள ஒருவன் பிறருக்குக் கொடை கொடுக்குந் தகுதி உடையவன் ஆதலின் அச்சொல் கொடை என்ற பொருளில் வழங்கப்பட்டு வந்தது. புறநானூறு 320-வது பாட்டு 'இரவலர்க் கருகா தீயும் வண்மை' என்பதில் வண்மை, கொடை என்ற பொருள் தந்து நின்றது. புறநானூற்றில் வழங்கப்பட்ட சொல்லாயிருத்தலால் இச்சொல் கொடை என்ற பொருளில் மூவாயிரம் நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன் வழங்கப்பட்டு வந்தது என்று நாம் அறியலாம். வண்மை அடியாகப் பிறந்த வள்ளல் என்ற சொல் முதலாவது கொடுத்தல் என்ற பொருளிலும், பின் தொழில் ஆகுபெயராய் கொடுத்தலைச் செய்கிறவன் அல்லது கொடையாளன் என்ற பொருளிலும் வழங்கப்பட்டு வந்தது. ஆனால் இப்பொழுது வள்ளல் என்ற

சொல் கொடுத்தல் என்ற பொருளில் வழங்கப்பட்டுவரவில்லை. இடைக்காலத்தில் அவ்வழக்கு அருகியிருக்கலாம். இடைக்காலத்தில் வண்மை என்ற சொல்லிருக்கவும் கொடுத்தல் என்ற பொருளில் வழங்கப்பட்டுவந்த வள்ளல் என்ற சொல்லுடன் 'மை' விகுதி சேர்ந்து ஆகிய வள்ளன்மை என்ற சொல்லுங் கொடைப் பண்பைக் குறிக்க வழங்கப்பட்டு வந்தது. வள்ளன்மை என்ற பண்புச்சொல் இப்பொழுதும் வழக்கிலிருக்கிறது. வண்மை என்ற சொல்லிலிருந்து வரையாது கொடுப்போர் என்னும் பொருளில் 'வள்ளியோர்' என்ற சொல்லும் சோழமன்னரைக் குறிக்கும் வளவன் என்ற சொல்லும் பிறந்து வழங்கப்பட்டு வந்தன.

3. மேலே கூறியவாறு கொடையாளன் என்ற பொருளில் பண்டைத்தமிழ் மக்களால் வழங்கப்பட்டுவந்த வள்ளல் என்ற சொல்லினது வழக்கால் நாம் அவர்களைப்பற்றிச் சில உண்மைகள் அறியக்கிடக்கின்றன.

ஒரு நாட்டு மக்கள் அல்லது ஒருபகுதி மக்களுடைய உயர்ந்த நிலையையும் தாழ்ந்த நிலையையும் முறையே அவர்களுடைய கொடைத் தன்மையும் கொடைத்தன்மையின்மையும் குறிக்கின்றன. ஏனெனில் அவர்களுடைய கொடைத்தன்மைக்குக் காரணமாயுள்ளது அவர்கள் பிறர் துன்பங்கண்டு உள்ளம் பொருது அதனை நீக்க முயலும் அன்புப் பண்பு ஆகும். இறைவனுடைய அருட்டன்மை அவர்களிடம் விளங்குதலே அவ்வன்புப் பண்புக்கு அடிப்படையாயுள்ளது. அவ்வன்புப் பண்பு காரணமாக அவர்கள் பிறருடைய துன்பத்தைத் தங்கள் துன்பம் போலக் கருதி அதனை நீக்க முயன்றும் அவர்கள் நலத்தைத் தங்கள் நலமாகக் கருதி அந்நலத்துக்குத் துணை செய்தும் மக்களுக்குள் ஒற்றுமையை உண்டு பண்ணுகிறார்கள். அந்த ஒற்றுமையால் அந்நாட்டிலிருக்கும் மக்களெல்லாருக்கும் நாட்டுப்பற்று உண்டாய் அதனால் நாடு மிக்க நலனுடையதாய்ப் பல்லாற்றானும் வளனுடையதாய்த் திகழ்கின்றது. தமிழ் நாட்டு நல்லிசைப்புலமை மெல்லியாராகிய ஔவையார் "நீதிவழுவா நெறி முறையின் இட்டார் பெரியோ ரிடாதா ரிழிகுலத்தோர்" என்று நல்வழியிற் கூறியருளினர். பிறப்பினால் மக்களுக்குப் பெருமை உண்டாவதில்லை. சிறப்புக் குணத்தாலே அவர்களுக்குப் பெருமை உண்டாகின்றது என்கிற உண்மையைப் பண்டைத் தமிழ் மக்கள் நன்கு அறிந்திருந்தார்கள். தமிழ் நாட்டு

மக்கள் பொதுவாகக் கொடைத்தன்மையிலும் அதனைச் சார்ந்து விருந்தோம்புந் திறனிலும் மிக்க சிறப்புடையவர்களாய் விளங்கினார்கள் என்பது பழைய தமிழிலக்கிய நூல்களால் வெள்ளிடைமலைபோல் விளங்குகின்றது. நாடெங்கும் இப்பொழுதும் மலிந்து விளங்குகின்ற தமிழ்மக்களுடைய அறநிலையங்களே அவர்களுடைய கொடைத்தன்மைக்குச் சான்று பகரும். சாதாரண மக்களுடைய திருந்திய வாழ்க்கை நிலை இவ்வாறிருக்க, தமிழ்நாட்டுச் சேர சோழ பாண்டிய அரசர்களும் சிற்றரசர்களும் பெருநிலக் கிழவர்களும் பிற செல்வர்களும் பண்டைத்தமிழ்ப் புலவர்களை ஆதரித்து அவர்களுக்குப் பெருங் கொடை கொடுத்து வந்தார்கள் என்பது புறநானூறு புலவராற்றுப்படை முதலிய பல பண்டைத் தமிழ் நூற் பாக்களால் அறியக் கிடக்கின்றது. சங்ககாலத்துக்குப் பிற்காலத்திலும் வேளாளர் என்ற ஒரு பகுதித் தமிழ்மக்கள் ஈகையாளராயிருந்ததனால் வேளாளர் என்ற சொல் ஈகையாளர் என்ற பொருளில் வழங்கப்பட்டது. வேளாளருடைய கொடைப் பண்பைப்பற்றி கி. பி. ஏழாவது நூற்றாண்டிலிருந்த திருஞான சம்பந்த சுவாமிகள் திரு ஆக்கூர்த்தேவாரம் 3-வது பாட்டில் "வேளாளரென்றவர்கள் வள்ளன்மையான் மிக்கிருக்கும் தாளாளர்" என்று திருவாய் மலர்ந்தருளினர். தமிழ்ப்புலவர்கள் இவ்வாறு ஆதரிக்கப்பட்டு வந்ததனாலே தமிழ்மொழி பண்டைக்காலத்திற் சிறப்புற்றோங்கியது. இத்தகைய பெருங்கொடையாளருக்கே வள்ளல் என்ற பெயர் பண்டைத்தமிழ்ப் புலவர்களால் வழங்கப்பட்டு வந்தது. இத்தகைய கொடை இன்னாருக்கு இவ் அளவு என்ற வரையரை யின்றிக் கொடுக்கப்பட்டு வந்ததனால் புலவர்கள் வரையாது கொடுப்போன் வள்ளலாகும் என்றும் கொடை மடம் (புறநானூறு 142-வது பாட்டு) என்றும் கூறிவந்தனர். இவ்வாறு கொடை கொடுத்து வந்த வள்ளல்களைப் பின் வந்த புலவர்கள் முதல் எழு வள்ளல், இடை எழு வள்ளல், கடை எழு வள்ளல் என மூவகையாகப் பாகுபாடு செய்து கூறினர். தமிழ் மக்கள் ஆரியர்களது கூட்டுறவினால் தங்களுக்கு உரிய அறிவுக்கண் ணிழந்து அவர்களுடைய தன்னலம் பற்றிய ஆதிக்கத் துட்பட்டு மக்களுடைய நற்பண்பைப் போற்றாது பிறப்பை மட்டும் என்று போற்றத் தொடங்கினார்களோ அன்றே அவர்கள் தங்களுடைய தாழ்ந்த நிலையாகிய கட்டிடத்துக்கு அடிகோலிக் கொண்டார்கள்.

ஆரியர்களுடைய ஆதிக்கம் நிலைபெற்றபின் தமிழர்கள் ஆரியர்களுக்கு மட்டும் அன்னசாலைகள் சத்திரங்கள் முதலிய அறநிலையங்களை எங்கும் அமைத்தனர். இது பண்டைத் தமிழ்மக்களுடைய நடுநிலைமைக்கு முற்றிலும் மாறுனது. தங்கள் பிறப்பையே பெரிதாகக் கருதி அதனையே போற்றுகிறவர்கள் நற்பண்புகளை விரும்பியடைய முயலமாட்டார்கள் ஆதலின் அவர்களும் தாழ்ந்த நிலையை உடையவர்களே யாவார்கள். ஆகவே, தமிழ் நாட்டிலும் ஏனைய இந்தியநாட்டுப் பகுதிகளிலும் மக்களுக்குள் வேற்றுமை யுணர்ச்சி மிகுதிப்பட்டு ஒற்றுமை யுணர்ச்சி குன்றி, கலகமும் குழப்பமும் அமைதியின்மையும் உண்டாயின. இந்தியநாடு தாழ்ந்த நிலை யடைந்து, அது காரணமாகப் பிறநாட்டார் அதனுட் புகுந்தார்கள். விரிப்பிற் பெருகும்.

4. மேலே கூறியவாறு பண்டைத்தமிழ்ப் புலவர்கள் பெருங்கொடையாளர்களுக்கு வழங்கி வந்த வள்ளல் என்ற சொல்லை சமயப் பெரியார்கள் இறைவன், உலகத்தில் வாழ்கின்ற மக்களுக்கு அவர்களது முயற்சிக்கும் முயற்சியினலடையும் தகுதிக்குந் தக்கவாறு அறிவும் அன்பும் அருளியும், அவ் அறிவுக்கும் அன்புக்கும் ஏற்றவாறு இன்பம் அருளியும், தன் வழிக்கு வாராத மக்களுக்குத் துன்பந்தந்து தன்வழிக்கு வரச்செய்தும், பக்குவப்பட்ட உயிர்களுக்குப் பேரின்பம் அருளியும் செய்துவருகிற பெருங்கொடையாளன் என்ற உண்மையை நன்கு அறிந்து அவ்விறைவனுக்கு வழங்கினர்கள். முற்றறிவும் பேராற்றலும் உடைய இறைவனுக்கும் சிற்றறிவும்சிறு ஆற்றலுமுடைய மக்களுக்கும் பெரிதும் இடையீடும் சிறிது ஒப்புமை யின்மையும் இருந்தாலும் தங்கள் அநுபவத்தினல் உண்மையை உணர்ந்த சமயப் பெரியார்கள் அவ்வநுபவ அறிவை உடையரல்லாத ஏனைய மக்களுக்கு அவர்கள் தங்கள் உலக அநுபவத்தில் அறிந்த கருத்துக்களைக் கொண்டு உணர்த்தவேண்டி அவ்வாறு கூறினர்கள். சமயப் பெரியார்கள் தமிழ்த்திருமுறை நூல்களில் பல இடங்களில் வள்ளல் என்ற சொல்லை இறைவனுக்கு வழங்கியருளினர். பெரிய புராணத்தில் பல இடங்களில் வள்ளல் என்ற சொல் இறைவனைக் குறிக்க வழங்கப்பட்டு வந்ததன்றி தொண்டர்களைக் குறிக்கவும் வழங்கப்பட்டு வந்துளது. சங்கப்புலவர்களால் வள்ளல் என்ற சொல் பெருங்கொடையாளர்களுக்கே வழங்கப்பட்டுவந்தது; இறைவனுக்கு

வழங்கப்பட்டுவரவில்லை. பிற்காலத்தில் அச்சொல் சமயப்பெரியார்களால் இறைவனுக்கும் இறைவன் அருள்விளங்கப்பெற்ற தொண்டர்களுக்கும் வழங்கப்பட்டுவந்தது. வள்ளல் என்ற சொல் வழக்குக்கு இங்கே சில எடுத்துக்காட்டுகள் கூறப்படும்.

(1) துள்ளு மிருவர்க்கும், வள்ளலாரூரை
உள்ளு மலர்தம்மேல், விள்ளும் வினைதானே.

திருஞானசம்பந்த சுவாமிகள் திருவாரூர் திருவிருக்குக்குறள் 9-வது பாட்டு.

(2) வேளாளரென்றவர்கள் வள்ளன்மையான் மிக்கிருக்கும்
—தாளாளர்

திருஞானசம்பந்த சுவாமிகள் திருஆக்கூர் தேவாரம். 3-வது பாட்டு.

(3) வள்ளலாகிய வான்மியூ ரீசனே.

திருநாவுக்கரசு சுவாமிகள் திருவான்மியூர் திருக்குறுந்தொகை 4-வது பாட்டு.

(4) வானங்கைத்தவர்க்கு மளப்பரிய வள்ளல்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவலிவலம் தேவாரம் 1-வது பாட்டு

(5) வள்ளல்—மருவும் பெருந்துறையை வாழ்த்து மின்கள்

திருவாசகம் பண்டாய நான்மறை 2-வது பாட்டு.

(6) வள்ளலே மணியம்பலத் துணின்றுடு மைந்தனே.

கருவூர்த் தேவர், திருக்கீழ்க்கோட்டூர் மணியம்பலம் திருவிசைப்பா 4-வது பாட்டு

(7) ஒப்பிலி வள்ளலை ஊழிமுதல்வனை—

திருமந்திரம் பாயிரம் 36-வது பாட்டு.

(8) வள்ளற் பிராற் கமுதேந்தி வருவோன்

11-ம் திருமுறை நம்பியாண்டார் நம்பி திருத்தொண்டர் திரு அகாதி 14-வது பாட்டு.

(9) வன்றொண்டர் தம்பாற் சென்று வள்ளலார் அருளிச்
செய்வார்

பெரியபுராணம்-ஏயர்கோன்கலிக்காம நாயனர் புராணம் 3-வது பாட்டு.

(10) மாடுசண்பை வள்ளலார் வந்தணைந்த வோகையால்

பெரியபுராணம், திருஞானசம்பந்தர் புராணம் 986-வது பாட்டு.

(இதில் வள்ளலார் திருஞானசம்பந்த அடிகளைக் குறிக்கிறது.)

(11) வள்ளலார் ஏயர் கோனுர் மலரடிவணங்கி
பெரியபுராணம் ஏயர் கோன்கலிக்காம நாயனுர் புராணம் 409-வது பாட்டு.
(இதில் வள்ளலார்ஏயர்கோன் கலிக்காமரைக் குறிக்கிறது.)

(12) தாழேனென் விடைக்கட்சொல்லியேகுந் தனிவள்ளலே
திருச்சிற்றம்பலக் கோவையார் 269-வது பாட்டு.
(இதில் தோழி, தலைவனைப்பார்த்து வள்ளலே எனக் கூறுகின்ருள்.)

---

# அருஞ்செய்யுட் பொருட் பகுதி

## திருவெங்கைக் கலம்பகம்

(24-வது செய்யுள்)

[சென்னை, கோ. இராமலிங்கத்தம்பிரான் அவர்கள்]

### மேகவிடு தூது

*கலிநிலைத்துறை*

புயலே யுனையங் கெதிர்கண் டிடுமப் பொழுதேவண்
குயிலே யனையா ளென்வர வினைநீ கூறுங்கால்
மயிலே யனையாள் பழமலை வேங்கை வளமன்னுள்
வெயிலே யிழையா ணின்பகை நிற்ருழ் விப்பாளே.

(ப - ரை) புயலே—மேகமே! வண்குயிலே அனையாள் - இனிய (சொற்களால்) வளவிய குயிலினையே ஒத்தவளும், மயிலே அனையாள்-(சாயலால்) மயிலினையே ஒத்தவளும், பழமலை வெங்கை வளம் அன்னுள் - பழமலை நாதர் எழுந்தருளிய வெங்கை நகரின் வளத்தை யொத்தவளும், வெயில் ஏய் - ஒளிபொருந்திய, இழையாள் - ஆபரணத்தை யுடையவளுமாகிய எனது தலைவியானவள், உனை அங்கு எதிர்கண்டிடும் அப்பொழுதே, உன்னைத் தான் தனித்திருக்குமிடத்தில் எதிர்கண்ட அப்பொழுதே என் வரவினை-எனது வருகையை, நீ கூறுங்கால் - நீ சொல்லுமிடத்தில், நின் பகை - நினது பகையாகிய கூந்தலை, நின் தாழ்விப்பாள் - நினக்கு வணங்கச் செய்வாள் ; (எ - று.)

(வி - ரை) இனி, மேகமே! பழமலைநாதர் எழுந்தருளிய வெங்கைநகரது வளம்போலச் சிறப்புற்றவளும், ஒளிவாய்ந்த ஆபரணத்தை யணிந்தவளுமாகிய எனது தலைவியானவள், உன்னை யெதிர்கண்ட அப்பொழுதே வண்குயிலேபோல வாடுவள்; எனது வரவினை நீ சொல்லுமிடத்து மகிழ்ந்து மயிலையே யொத்தவளாவாள்; (அன்றியும்) நின்பகையாகிய கூந்தலை நினக்கு வணங்கச் செய்வாள் என்பதாம்.

பொருள்வயின் சென்ற தலைமகன் கார்காலத்தில் வருவேன் என்று சொல்லித் தலைவியைப் பிரிந்தவன் பொருளீட்டிக்கொண்டு திரும்புகையில், விரைவாக முந்துற்றுச் செல்லும் மேகத்தை நோக்கி நீ முற்பட்டுச் சென்று எம்தலைவியிடத்து எம்வருகையைக் கூறுவாய் என்று அதனை வேண்டுதல்.

குயில் கார்காலத்தில் வாடுதலையும் மயில் களித்தலையும்,

"பூங்கரும் புடைந்த தீஞ்சா றடுபுகை புயலென் றெண்ணி
மாங்குயிற் றொழுதி யாவும் வாய்விடா தொழிந்த மஞ்ஞை
தூங்கிசை வண்டுந் தேனுஞ் சுரும்பொடு ஞிமிறும் பாடத்
தேங்கமழ் சோலை தோறுஞ் சிறைவிரித் தாடு மாதோ."

எனவும், (நைடதம்-நாட்-16.)

"நலம்ப யின்றிள வேனிலி னவிலுமாங் குயில்க
ளலம்பு கார்வரும் போதுவா யடைப்பது முன்னாட்
புலம்பு கொண்டவர் காரொடும் தலைவர்தேர் புகுத
வலம்பு னைந்துரை வளமொழிக் கிடைதலா னன்றே"

எனவும், (காஞ்சி - நாட். 62)

"என்னை யூர்ந்தருள் சுடர்வடி யிலையவேற் பெருமான்
றன்னை நன்மரு கெனப்படைத் தவன்றன தூர்தி
அன்ன தாமெனுங் கேண்மையா னளிமுகிற் குலத்தைக்
கன்னி மாமயில் காண்டொறுங் களிசிறந் தகவும்"

எனவும் வருஞ்செய்யுட்களானும் உணர்க. (காஞ்சி - நாட் - 43)

நின்பகை - என்றது கூந்தலை.

நின்பகை நிற்றாழ்விப்பாள் என்புழி, "நின்னீறியல்பா முறவே" என்பதனாலும், "இயல்பின் விகாரமும்" என்பதனாலும், நின் என்பது இயல்பாயும் திரிந்தும் வந்தது.

இது முதல்நான்கு சீர்களும் மாச்சீர்களாகவும் ஐந்தாஞ்சீர் காய்ச்சீராகவும் வந்த கலிநிலைத்துறை.

# பதிற்றுப்பத்து விளக்கம்

(பண்டிதர் A. நடராஜபிள்ளையவர்கள்)

(முன் ௪௧௨-ம் பக்கத் தொடர்ச்சி)

## விருத்தியுரை

"குமரவேள் சூரபத்மனுடைய மாமரத்தை வெட்டி யெறிந்த வெற்றியுடன் களிறின்மீது எழுந்தருளினாற் போல, நீ எதிரிகளுடைய கடம்பினை வெட்டி யெறிந்த வெற்றியுடன் யானைமீது பொலிந்தாய்," என உவமானத்தையும் உவமேயத்தையும் பொருத்திக் காண்க. சேரலாதன் வெட்டி யெறிந்த கடம்பு மைசூர் நாட்டின் மேற்குப் பாகத்தை யாண்ட கதம்ப வேந்தர்களின் காவன் மரமாகும். இப்பாட்டில், எதிரிகளின் மார்பைத் திறந்ததினாலுண்டாகிய புண்ணுமிழ்குருதி என்ற அடைமொழிச் சிறப்பானும், அக்குருதியால் நீலமணி போன்ற கடற்கழிகளின் நீர் குங்குமச்சாந்து போலாயிற்று எனச் சிறப்பித்தமையானும் இதற்குப் புண்ணுமிழ் குருதி என்று பெயர் கொடுக்கப்பட்டது. இப்பாட்டால் சேரலாதனுடைய வெற்றிச் சிறப்பும், செல்வச் சிறப்பும் கூறப்பட்டன. அருவி நீரும், நாரத்தையிலைகளும் கவரி மான்களுக்கு உணவுப் பொருள்களாம். மயிர் நீப்பினும் இறந்துபடும் கவரிமான்கள் முள்ளுடை முருக்கமரங்கள் செறிந்த மலைச்சாரலில் இனிய கனவு கண்டுகொண்டு துஞ்சும் என்றமையாலே இமயமலைவாழ் முனிவர் சிறப்பு மேம்பட்டதாயிற்று. ஊக்கல்+ஐ =ஊக்கலை: ஐ - சாரியை. கனவும் - செய்யுமென் வாய்பாட்டுப் பெயரெச்சம். அ+இடை=ஆயிடை ; சுட்டு நீள யகரந் தோன்றியது. கமம் சூல் - நிறைந்த நீர்: கடலுக்குக் கருப்பம் போன்றிருத்தலால், 'சூல்,' எனப்பட்டது. சூர் உடை - சூரபத்மன் தனக்கு அரணாகக் கொண்டுள்ள (மாமரம்). யானைக்குக் கழுத்தின் கீழும் முன் காலிரண்டின் மேல்பாகமும் மார்பினை யடுத்து, அணியும் மாலைகள் பொருந்து மிடமாயிருத்தலின், "மார்புமலிபைந்தார்," என்பதற்கு, "கழுத்திலிருந்து தொங்குகின்ற பச்சைமணி மாலைகள்," எனப் பொருள் கூறப்பட்டது. எஎய்=ஏவி: சொல்லிசை யளபெடை.

## பொழிப்புரை

இரத்தத்தால் சிவந்த வாயினையுடைய கைவேலானது போரில் எதிர்த்தவர்களைக் குத்தித் தள்ளுதலினாலே, எதிரிகளுடைய அருமையான மார்புகள் திறக்கப் பட்டதனாலுண்டாகிய காயங்களினின்றும் வெளிப்பட்ட இரத்த வெள்ளத்தினாலே, நீலமணி போன்ற நிறத்தினையுடைய பெரிய கடற்கழிகளிலுள்ள கடல்நீரானது தன்னுடைய நீலநிறம் மாறப்பெற்றுக் குங்குமச் சாந்து போலக் குழம்பும்படி, எதிரிகளுடைய காவலிடங்களை யழித்து, மாறுபாடாகிய மிகுந்த மேன்மையினையும், அதிகமாகிய ஊக்கத்தினையுங் கொண்ட அநேக வீரர்கள் சூழ்ந்து, காவல் செய்துகொண் டிருந்த, திரண்ட அழகிய கடம்பமரத்தினுடைய சிறந்த அடிப்பாக முழுவதும் சிதைந்து துகளாகும்படி, படைகளைச் செலுத்தி, முள்ளையுடைய முருக்க மரங்கள் நெருங்கி நிற்கும் படியான மலைச்சாரல்களில் முனிவர்களுடைய ஆணை காரணமாக முருக்கமரங்களாலும், பிற விலங்குகளாலும், மக்களாலும் எவ்விதமான இடையூறுமின்றி, இராக்காலத்தில் இனிதாக உறங்குகின்ற கவரிமான்கள், பகற் காலத்திற் பருகி மகிழ்ந்த, பரவி விளங்கி விழுகின்ற அருவிகளுடன், மேய்ந்து சுவை கண்ட நரத்தை மரங்களைக் கனவிற் கண்டு கொண்டிருக்கும் படியான, முனிவர்கள் நெருங்கி வசிக்கும் மிகுந்த புகழையுடைய இமயமலை முதல், தெற்கேயுள்ள கன்னியா குமரிவரை காணப்படும் பல நாடுகளில் வாழும் அரசர்களில் மிகவும் புகழ்ந்து கூறப்படும் பேரரசர்களுடைய வலிமை கெடும்படி அழித்து வெற்றி கொண்டு கோலால் அடித்து ஒலிக்கும்படியான முரசவாத்தியத்தை முழக்கும்படியான வெற்றி கொண்ட பல போர்களையும், அன்புடனே வண்டுகள் சூழ்ந்து அருந்தும்படியான தேனினைக் கொண்ட மலர் மாலைகளை யணிந்த மார்பினையும், போர்க்களத்தில் எதிர்த்த எதிரிகளைக் கொல்லும்படியான சேனைகளையுமுடைய நெடுஞ் சேரலாதனே!

மலைகளோ வென மயங்கக் கூடிய அலைகளிலிருந்து உண்டாகும் பெரிய துளிகளைக் கொண்ட காற்று வீசித் தாக்குதலால், ஆடிக்கொண்டிருக்கும்படியான மிகுந்து நிறைந்த நீரையுடைய குளிர்ச்சி மிக்க பெரிய இடத்தினையுடைய கருங்கடலிலே, இருந்து

கொண்டு தேவர்களுக்கு வருத்தத்தை யுண்டாக்கி, அவுணர் களுக்குக் காவலைச் செய்துகொண்டிருந்த, சூரபதுமனுக்குச் சொந்தமான மாமரத்தினுடைய அடிப்பாக முழுவதையும் வேலாலே வெட்டி யெறிந்த பெரும் புகழையும், மிகுந்த கோபத் தையும், வலிமையினையும் கொண்ட குமரக் கடவுள் யானையின்மீது ஏறிச் சென்றாற்போல, கழுத்திலிருந்து தொங்குகின்ற பச்சை மணி மாலைகள் நெற்றிப் பட்டத்துடன் கூடி விளங்கும்படியான வெற்றிமிக்க கொம்புகளையுடைய குற்றமில்லாத யானையினுடைய பொன்னால் அலங்கரிக்கப்பட்ட பிடரியின் மேலே எழுந்தருளிப் பொலிந்த உன்னுடைய பல புலவர்களாலும் புகழ்ந்து பாடப்பட்ட செல்வத்தை நாங்கள் கண்டு மகிழ்கின்றோம்.

## புதிய நடை

போர்க்களத்தில் எதிர்த்த எதிரிகளைக் கொல்லும்படியான புயவலிமிக்க படைகளையுடைய நெடுஞ்சேரலாதனே! அன்புடனே வண்டுகள் சூழ்ந்து, அருந்தும்படியான தேன்வளமிக்க மலர் மாலைகளை யணிந்த மார்பினையுடையாய்! நீ வெற்றிமிக்க பல போர்களைக் கண்டுள்ளாய்; மிகுந்த புகழை யுடைய இமயமலை முதல் தெற்கே யுள்ள கன்னியாகுமரிவரை காணப்படும் பல நாடு களில் வாழும் அரசர்களில், மிகவும் புகழ்ந்து கூறப்படும் பேரரசர் களுடைய பெருமை கெடும்படி யழித்தாய். மேற்கூறிய இமயமலை முள்ளையுடைய முருக்க மரங்கள் நெருங்கி நிற்கும்படியான மலைச் சாரல்கள் காணும் வளமுடையதாம். அம் மலைச் சாரல்களிற் கவரி மான்கள் முனிவர்களுடைய ஆணைகாரணமாக முருக்க மரங்களா லும், பிற விலங்குகளாலும், மக்களாலும் எவ்விதமான இடையூறு மின்றி, இராக்காலத்தில் இனிதாக உறங்கிக்கொண்டிருக்கும். அப் பொழுது, அவைகள் பகற் காலத்திற் பருகி மகிழ்ந்தனவும், பரவி விளங்கி விழுகின்றவையுமான அருவிகளுடனே, மேய்ந்து சுவை கண்ட நாரத்தை மரங்களையும் கனவிற் காணும். முனிவர்கள் பலர் அங்கே நெருங்கி வசித்துக்கொண் டிருப்பார்கள்.

நீ உனது எதிரிகளுடைய காவல் மரமாகிய திரண்ட அழகிய கடம்ப மரத்தின் சிறந்த அடிப்பாக முழுவதுஞ் சிதைந்து துக ளாகும்படி படைகளைச் செலுத்தினாய். அக் கடம்ப மரம் மாறு

பாடாகிய மிகுந்த வன்மையினையும், உயர்ந்த ஊக்கத்தினையு முடைய பல வீரர்களாற் சூழ்ந்து பாதுகாக்கப்பட் டிருந்தது. நீ அவ் வீரர் களையும், அவர்கள் நின்று காவல் செய்த காவலிடங்களையும் கண் காணுவாறு அழித்தாய்; அப்பொழுது, உன்னை யெதிர்த்த கணக்கு வழக்கில்லாத காவற் படைகளைக் குருதியாற் சிவந்த வாயினையுடைய கைவேலாற் குத்தித் தள்ளினாய். அதனால், அவர் களுடைய அருமையான மார்புகள் திறக்கப்பட்டன. திறக்கப் பட்டதனா லுண்டாகிய புண்களினின்றும் குருதி வெள்ளம் கொப் புளித்துப் புறப்பட்டது. அதனால், அருகிலுள்ள பெரிய கடற் கழிகளிலுள்ள நீரானது நீலமணிபோன்ற நிறம் மாறப் பெற்று குங்குமச் சாந்துபோல, குழம்பியது. இங்ஙனம் எற்படும் பல வெற்றிகளுக்காகக் கோலால் அடித்து முழக்கும்படியான முரச மொன்று உனக்கு உண்டு.

மிகுந்த சினத்தையும் வலிமையினையுங் கொண்ட குமரக் கட வுள் யானையின்மீது எறிச் சென்றாற்போல, வெற்றிமிக்க கொம்பு களையுடைய குற்றமில்லாத கொடுங்களிற்றின் பொன்னால் அலங் கரிக்கப்பட்ட நெடும் பிடரியின் மேலே எழுந்தருளிப் பொலிந்த உன்னுடைய, பல புலவர்களாற் புகழ்ந்து பாடப்பட்ட செல் வத்தை நாங்கள் கண்டு மகிழ்கின்றோம். உனது களிற்றின் கழுத்திலிருந்து தொங்குகின்ற பச்சைமணி மாலைகள் நெற்றிப்பட் டத்துடன் கூடி நிகரற்று விளங்கும். குமரக் கடவுள், குளிர்ச்சி மிக்க பெரிய இடத்தினையுடைய கருங்கடலிலே இருந்து கொண்டு, தேவர்களுக்குத் துன்பத்தைச் செய்து, அவுணர்களுக்குக் காவ லைச் செய்த, சூரபதுமனுக்குச் சொந்தமான மாமரத்தினுடைய அடிப்பாக முழுவதையும் வேலானே வெட்டி யெறிந்த பெரும் புகழை யுடையவர். அக் கருங்கடல், மலைகளோ வென மயங்கக் கூடிய அலைகளிலிருந்து உண்டாகும் பெரிய துளிகளைக் கொண்ட காற்று வீசித் தாக்குதலால், ஆடிக்கொண் டிருக்கும் மிகுந்து நிறைந்த நீரையுடையது.

இதில், எதிரிகளினுடைய படைவீரர்களின் மார்பைத் திறந் ததனா லுண்டாகிய புண்களினின்றும் புறப்பட்ட குருதி வெள் ளம் நீலமணியின் நிறத்தையுடைய கடற்கழிகளின் நீரைக் குங்கு மச் சாந்துபோலாக்கியது என்ற சிறப்பால் இதற்குப் புண்ணுமிழ் குருதி எனப் பெயர் கொடுக்கப்பட்டது. (தொடரும்.)

# காழிக் கண்ணுடைய வள்ளலார்

[சீகாழி ஸ்ரீமான் ப. அ. முத்துத்தாண்டவராயபிள்ளை அவர்கள்]

(முன் ௬௰௩-ம் பக்கத் தொடர்ச்சி)

தொன்றுதொட்டு இந்நாட்டை ஆண்டு வருபவர் சேரசோழ பாண்டியரும் பதினெண்குடி வேளிரும் ஆவர். இவர் இராஜன்னியர் என்னும் பெருங்குழுவினைச் சேர்ந்தவர்; சூரிய சந்திர வமிசத்தினர். இவருள் ஒருவருக்குக் கர்மலோபம் ஏற்பட்ட போது ஏழு தலைமுறைக்குள் அக்கர்மத்தைச்செய்து கொள்ளின், அவர் வமிசத்தையும் கோத்திரத்தையும் அல்லது அக்கினி வமிசத்தையும் அவ்வேள்வியாசான் கோத்திரத்தையும் அடைவர். நெடுங்காலம் கர்மலோபிகள் ஆயினும் அரசர்க்குரிய ஐந்து பக்கத்தையும் நேரே வகிக்க முடியாமல் அவரது அனுமதி பெற்றே முடித்தற் குரியராகித் தண்டத்தலைவரும் மண்டல மாந்தருமாய் அரசர்க்குரிய எக்கருமங்களையும் செய்தற் குரியாராதலின் வேளாளர் எனப்படுவர். இவர்கள் எக்கருமங்களைச் செய்துவரினும் பூமி திருத்தி உழுதூண் செய்தலாகிய தொழிலிலே விசேஷித்துச் சொல்லப்படுவர், நிலத்துக்குடையோர் இவரே யாகலின். நெடுங்காலம்வரை, இவர்கள் வேளாளர் என்றே பிரித்து அழைக்கப்பட்டு வரினும் ஒருவாறு கிரியாசாரங்கள் குறைபட்டது கருதி இற்றைக்கு ஆயிரம் வருடங்களாகச் சூத்திரத் தன்மை அடைந்தவர்களாகக் கருதப்பட்டு வந்தனர்; ஆயினும் சூத்திரர்கள் அல்லர். அடியாராகிய சூத்திருக்கும் வேளாளருக்கும் பெரும்பான்மை பேதம் நூல்களுட் கண்டுணரலாம். இக்குறிப்பைச் சோழமண்டல சதகத்துச் சுருக்கமாகவும், கார்மண்டல சதகத்துப் பெருக்கமாகவும் வரைந்துளேனாதலின் ஆண்டுக் கண்டு கொள்க. இவ் வரலாற்றை வடமொழி தென்மொழிவல்லுநர் நன்கறிவர். இவ் வுண்மை இன்றளவும் உலகத்தில் நடைபெறல் காணப்படுகின்றது. இவ்வகையினரே அரசனேவலால் பிறமண்டலங்களையும் நிணை மாந்தர்களையும் ஆளுதற்கு நியமிக்கப்படுவர் முற்காலத்து.

அவ்வாறே பூர்வத்துச் சோழமன்னர் தமது குடிவேளிருள் எழினி குலத்தவரைக் கொல்லிக் கூற்றத்துக் குதிரைமலைக்கும் மழவர் குலத்திற்கும் தலைவராகத் தகடூரைத் தலைநகராகக்கொண்டு

ஆண்டுவரும்படி நியமித்தனர். இவருள் பொகுட்டெழினி என்பான் ஆங்கிலாப்தத் தொடக்கத்தில் அக் கூற்றத்தை ஆண்டு வந்தான். இவன் புதல்வன் அதிகமான். இவன் புதல்வன் பொகுட்டெழினி. இவருள் இடைநின்ற எழினி அதிகமான் நெடுமிடால் வரையாது கொடுக்கும் வள்ளல் (சிறுபாண். 94—103.). சேரவாசர்களுக்கும் சோழவாசர்களுக்கும் உறவுள்ளதுபோலவே இவ்வதிகன் சேரர்களோடு உறவுள்ளவன் ஆனான். அதனால் சில காலம் சேரவாசருக்குட்பட் டிருந்து பனமாலை சூடிவந்தான். (எழினிகள் சிவபிரானிடத்துப் பேரன்புடையராதலின் கூவிள மாலையை என்றுந் தரிப்பர்.) சேரன் முதலிய எழுவரை வென்று எழிலச்சினை பூண்டவன். இவன் கல்விநிலை ஔவையையும் சங்கப் புலவரையும் தோழமைகொண்டிருந்ததாலும், வீரம் தொண்டைமான் உள்ளிட்ட அரசரை வென்று வந்தபடியாலும், கொடைத்திறம் 'பால்புரை பிறைநுதல் பொலிந்த சென்னி, நீலமணிமிடற் றொருவன்போல மன்னுக பெருமநீயே' என வாழ்த்தப்பட்டபடியாலும் விளங்கும். இங்கும் இவன் சைவப்பற்றுக் கோக்கப்படும். மற்றும் இவன் பெருமை அகம் புறம் தொகை நூல்கள்பால் விரித்துரைக்கப்படும். இவன் இராஜ்ய விஸ்தீரணம் திருவேங்கடம் தகடூர் உதகமண்டலம் அதிகை இவற்றைப் புள்ளியாகக்கொண்டு நேர் கோட்டால் இணைக்க உண்டாகிய நாற்கோணப் பரப்பே. இவன் காலத்துப் பிறகு இவன் குலத்தோர் இவருள் திருமுடிக் காரியினிடமிருந்து பற்றிய பெண்ணை நாட்டின் பகுதியைத் திருவதிகையினின்றும் புரந்து வந்தனர். பூர்வத்தில் அதிகன் நிர்மாணித்த நகரம் திருவதிகை. சோழர் பகைஞனாகப் பெரிய புராணத்தில் கூறிய அதிகனும் மருளவிழுந்த சைவனே. பிற்காலத்து யவநிகா என்ற எழினிப் பேருடன் தகடா என்ற தகடூரில் சிற்றரசனாக விருந்தவனுஞ் சைவனே. திருவதிகையில் வமிசபரம்பரையாக ஆண்டுவந்த அதிகைத் தலைவரும் சைவரே. இவ்வதிகை வேளிரும் காரி வேளிரும் செஞ்சி வேளிரும் சோழகுல வேளிருமாக ஆண்டுவந்த நடு நாட்டைச் சோழர்களும் பல்லவரும் கங்கரும் 13-ம் நூற்றாண்டு வரை அரசு புரிந்தனர். இவர்களே இவ்விஷயங்களுக்கு உடையராயிருந்தனர். இவர்களுள் ஒருவர் 1382-ல் விஜயநகரத்து (தஞ்சை சமஸ்தானத்தோடு விஜயநகரத்தார் திருவதிகைக் கூற்றத்தையும் சேர்த்துக்கொண்டார்) இரண்டாம்

ஹரிஹரனால் ஜயிக்கப்பட்டார். 1646ல் பீஜபுரத்துச் சுல்தான் கீழும், 1676ல் சிவாஜியின் கீழும் அரசாண்டார் இவ்வதிகர்.

அதிகமான் வமிசத்தினர் ஆண்டுவந்த காரணம்பற்றித் திருவதிகைக்கு அதியரைய மங்கல நகரம் என்று பெயர் வழங்கிற்று. இவர்கள் இராஜ்ய நிர்வாகத்தோடு வைதிக சைவத்தை நிலைநாட்டற் பொருட்டுக் குகமடம் என்ற திருமடம் ஒன்றையும் ஏற்படுத்தினர். அவ்வக் காலங்களில் இப் பகுதியை அரசாண்டுவந்த சார்வபௌமர்களாகிய கங்கபல்லவ மன்னரில் தெள்ளாறெறிந்த நந்திகோத்தரையனும் (710-760), முனையர்கோன் இளவரையனும் (775), நிருபதுங்கனும் (850), ராஜேந்திர சோழனும் (1000-25), வீரபாண்டியனும் (1020-1050), குலோத்துங்க சோழனும் (1070-1117), இரண்டாவான் குலோத்துங்கனும் (1132), விக்கிரம பாண்டியனும் (1175), பெருஞ்சிங்கனும் (1225), கோனேரி மெய்கண்டானும் (1550) வீரட்டானேச்சரத்திற்குப்போல் இம் மடத்திற்கும் நிபந்தங்கள் ஏற்படுத்தினர். இத்திருமடம் குணதரவீச்சரத்திற்குக் கீழ்பாலிருந்தது.

காரியம் இங்ஙனமாகவே, அதிகைக் கதிபர்கள் 1380-ல் சீகாழி க்ஷேத்திரத்தில் அக் குகமடத்தை ஆனந்த தீர்த்தத்தின் கீழ்பால் ஸ்தாபித்துக் கிரீடாசாரியர்களாலே சகல விமரிசைகளுடன் சத்காலக்ஷேபஞ் செய்து வந்தனர். அப்பர் சுவாமிகள் அனுக்கிரகத்தோடு சம்பந்தர் அனுக்கிரகமும் கிடைத்தற் கேற்பட்டது. இம் மரபினருள் சண்பையர் தலைவனென்பாரும் மங்கையர்க்கரசி யென்பாரும் செய்த தவப்பயனால் கண்ணுடைய வள்ளலார் இரௌத்திரிஹு பங்குனிமீ திருவாதிரைத் திருநாளில் (1380-1) திருவவதாரம் செய்து 96 திருநட்சத்திரத்திலும் பூவுலகத்தை வைதிக சமயத்தால் அலங்கரித்து நள வருஷம் (1476) சித்திரைமீ சித்திரைத் திருநாளில் சோதியிற் பரிபூரண மடைந்தார். மல்குக வேதவேள்வி—வாழ்க.

அக்காலத்துக் கழுமல வளநாட்டில் சைவ வைஷ்ணவ ஸ்மார்த்த மாத்துவர்கள் பலர் வசித்துத் தத்தம் மதங்களைப் போற்றிவந்தனர். சைவருள்ளும் வீரசைவரும் சுத்த சைவரும் தூர்வாசர் ரேணுகர் சோமசம்பு வருணசம்பு முதலிய சைவபத்ததிகளை அனுஷ்டித்து வந்தனர். இவர் யாவரையும் முத்தி மார்க்கத்தில் ஒரு கோத்திராகும்படி "அருட்பெருந்தீயில் அடியோ மடிக்

குடில் ஒருத்தரும் வழாமே" ஒடுக்கி, அபேதவுணர்ச்சியினாக்கி மெய்ந்நெறிக்கே செலுத்த வேண்டியவற்றை வள்ளலார் வரையாது பெற்றவாதலின் வரையாது அருள்புரிந்து உண்மை வள்ளலாயினர்.

கண்ணுடைய வள்ளல் கி. பி. 1380 முதல் 1476 வரை இந் நிலவுலகை அலங்கரித்து வந்தார் என்பதற்குச் சில ஆதாரங்களைப் பார்ப்போம். இவ்வள்ளல் இம்மண்டலத்தில் தமது காலத்தே கூகூ சைவமடங்களைத் தாபித்துத் தாம் அவைகட்குத் தலைவராகவும் ஏனை மடபதிகள் இதா தத்துவபதிகளாகவும் (க. கூசு) விளங்கச் செய்தார். கூஎ-வது கர்த்தர் சுயம்பிரகாசவள்ளல். இவரது சீடராகிய சிவஞானவள்ளல் தாம் தலைவராகத் தம்மையுட்படுத்து (கூஅ-கசுக) அறுபத்துநான்கு கலாபதிகளை நிறுவினர். இவர்களுக்குப்பின் (கசுஉ. a.h.) அஷ்டதிக் கஜங்களாகச் சட்டைநாதர், நெல்வேலிப் பெருமாள், மயிலைநாதர், விருத்தகிரியார், மதுரைப்பதியார், கண்ணுடையார், நெல்வேலியண்ணல், அஞ்சைக்களத்தப்பர் வீற்றிருந்தனர். இவர்களுக்குப்பின், கூ தலைமுறைகளில் ஆதீன கர்த்தர்களாக (ககூஉ.கஎ0) சிவகுருநாதர், முத்தையர், ஷண்முகர், சிவகுருநாதர், சட்டைநாதர், நெல்வேலியரையப் பெருமாள், சிவகுருநாதர், சோமசுந்தரர். (பட்டத்துக்கு எழுந்தது 1842), சந்திரசேகரர், (பட்டம் 1866) எழுந்தருளினர். 1896ம் ஆு முதல் இப்போது (கஎக) பரமாசாரியராக வீற்றிருப்பவர் முத்துச் சட்டைநாத வள்ளல் (நீடூழிவாழ்க). இத்திருமுடியடைவில் வந்தவர் யாவரும் பெரும்பாலும் நீண்டகாலம் வாழ்ந்தவர். இவர்களை நோக்க இற்றைக்கு, ரு0 ஆண்டுகளுக்கு முன்னரே கண்ணுடைய திருஞானசம்பந்தர் திருவவதரித்திருத்தல் வேண்டும். அன்றியும் மதுரையை விசுவப்பநாயக்கர் ஆண்டகாலத்து (1559-63) அம் மன்னர்பிரானல் வள்ளல்களுக்கு நிறுவப்பட்ட திருமடங்களை விவரிக்கும் சிலாசாசனம் திருவாலவாய்ச் சுந்தரபாண்டியன் கோபுரச் சார்பிற் பொறிக்கப்பட்டுளது. அன்றியும், திருஞான சம்பந்த சுவாமிகளுடைய நல்லம்மான் ஆகிய நம்பாண்டாரை வக்தாவாகவும் முத்தமிழ் விரகருடைய திருக்கூட்டத்தாரைச் சுரோதாக்களாகவும் வைத்துக் கண்ணுடைய வள்ளல் இயற்றியருளிய தத்துவ விளக்கச் செய்யுள்கள் சிவப்பிரகாச வியாக்கியானத்தில் மதுரைச் சிவப்பிரகாசராலும் (சகம் கசுக0), சிவஞான

சித்தியாரின் பூர்வவுரை யாசிரியர்களாலும் மேற்கோளாக ஆளப் பட்டுள்ளன. அன்றியும் தென்னுட்டில் மாலிக் காபூர் (1310) பெரிஷ்டாகுசுறுகான் (1318) படையெடுத்து வந்ததால் உண்டான சமயச் சீர்கேடு கண்ணுடையாரால் புனருத்தாரணம் செய்யப்பட்டதாக ஐதிகம் உளது. அன்றியும் தருமபுரவாதீனத்துப் பிரதம ஞானசாரியர் முத்தி நிச்சய நூலுள் நிராகரிக்கின்ற மறை ஞான பண்டாரத்தை முன்னிலைப்படுத்திச் சிவஞான வள்ளலார் தமது சிந்தனை நூலில் அப்பண்டாரத்தின் கொள்கைகளைத் திரஸ்கரிக்கின்ருர். அன்றியும் மெய்கண்ட சந்தானம் வள்ளல் சந்தானம் என்னும் சொல்வழக்கு நெடுங்காலமாக வழங்கிவருகிறது. அன்றியும் சோழமண்டலசதகம் (கி.பி. 1687) உச-வது செய்யுள் கமலை ஞானப்பிரகாசரையும், உசுஎ-வது செய்யுள் திருவாவடுதுறை ௩-வது பட்டத்து அம்பலவாண தேசிகரையும், உரு-வது செய்யுள் காழிக்கண்ணுடைய வள்ளலாரையுங் கூறுவன. இம்முகாந்தரங்களாலும் பிற பல ஆதாரங்களாலும் வள்ளல் குருராயரது காலம் பதினைந்தாம் நாற்ருண்டின் முற்பகுதியே எனக் கொள்ளல் வேண்டும்.

(தொடரும்)

---

# மூர்த்திநாயனர்

[முன் சா௱ம் பக்கத் தொடர்ச்சி]

ஐந்தாங் கூறு

## நாயனரின் நல்லாட்சி

அமண மன்னன் மாண்ட செய்தி காட்டுத் தீப்போல நாடெங்கும் பரவியது. அவனிறந்த அக்கணமே, அச்சத்தை யுண்டாக்கிக் கொண்டிருந்த வால் வெள்ளியும் மறைந்தொழிந்தது. இவற்ருல், சொக்கலிங்கப் பெருமான் திருவருளைக்கண்டு தெளிந்த பாண்டிமக்கள் அனைவரும் அன்றிரவிலேயே சமணசமயப்பற்றை விடுத்து, சைவசமயத்தை மேற்கொண்டனர். மேலும், அவர்கள் திருவாலவாயினைச் சேர்ந்து, சொக்கலிங்கப் பெருமானைப் பலவாறு துதிக்கலாயினர். அவர்களுக்குப் பெருமான் விண் வெளியிலே காட்சி கொடுத்தார்; மூர்த்திநாயனரைப் பாண்டி நாட்டு மன்ன

னுகக் கொண்டு வாழும்படி கட்டளையிட்டு மறைந்தார். பாண்டி மக்கள் அதனுல், அகமகிழ்ச்சி மிக்கவர்களாய் மூர்த்திநாயனுரை அணுகிப் பலவாறு அவரைப் போற்றிப் புகழ்ந்து, மன்னிப்புக் கேட்டு வணங்கினர்கள்.

இம்முறையாக அன்றிரவு செல்ல, மறுநாட்காலையில் பாண்டி நாட்டுக் குடிமக்களும், அரசியல் அதிகாரிகளும், யானை குதிரை தேர் முதலிய பரிவாரங்களும் மீனக்கொடி, சாமரம், ஆலவட்டம் விருது முதலிய அரச சின்னங்களுடன் வந்து மூர்த்திநாயனுரைக் கண்டு கொண்டார்கள். மூர்த்திநாயனுர் பட்டத்து யானைமீது அமர்விக்கப் பெற்ருர். அரசபரிவாரங்கள் முன்னே நடக்க அவர் மதுரைத் தெருக்களின் வழியே ஊர்வலமாகப் பாண்டியன் அரண்மனைக்குச் சென்ருர். பலவிதமான வாத்தியங்களும் தமிழ் மறைகளும் முழங்க, மூர்த்திநாயனுர்க்கு முடிசூட்டுவிழாச் சிறப்பாக நடந்தது. அன்று மாலை மூர்த்திநாயனுர் அரண்மனை வாயிலின் வெளியே வந்து நின்று புல்வெளியில் நிறைந்திருந்த பாண்டிநாட்டு மக்கள் பலர்க்கும் காட்சி கொடுத்தார். அவரைக்கண்ட குடிமக்கள் அனைவரும் கைகொட்டி மகிழ்ந்து ஆரவாரித்தார்கள். மூர்த்திநாயனுர் அதற்கு நன்றியறிதல் காட்டிய முகத்தோடு அவர்களை நோக்கிப் பின்வருமாறு சொற்பொழிவு ஒன்று நிகழ்த்தினர்:—

"எனது தாய் நாட்டு மக்காள்! உங்களில் ஒருவனுகிய என்னை இவ்வுயர்நிலைக்குக் கொண்டுவந்த அந்தச் செம்பொருளாகிய சொக்கலிங்கப் பெருமான் திருவடிகளைச் சென்னிமிசைச் சூடிக் கொள்கின்றேன். என்பேரில் அன்பு மிக்க பாண்டி மக்களாகிய உங்கட்கு எனது உண்மையான நன்றியறிதல் உரித்தாவதாக! அமணராட்சியால் அலமந்த உங்களைச் சைவ சமயத்திற் சேர்த்துத் தடுத்தாட்கொள்ள வேண்டியே எம்பெருமான் எனக்கு இப் பணியைத் தந்தருளினர் என்பது நீங்கள் அனைவரும் அறிந்தவொன்ரும். ஒரு நாட்டுக்கு அரசன் வேண்டியது குடிகளின் நன்மைக்கேயாம். எப்படியென்ருல், மக்கட்பேருகிய வீட்டினை (மோட்சத்தை), மக்கள் தம்முள் ஒன்றுகூடிக் கலந்து வாழ்ந்து பெறும் அன்பாகிய அருங்குணத்தாலேயே அடைதல் வேண்டும். மக்களின் கலக்கமற்ற கூட்டுறவினுக்கு நல்லரசாட்சியினையுடைய அரசன் இன்றியமையாதவன் ஆகின்ருன். அரசன் இல்லாவிட்

டால், மக்களுக்குள் கொலை, களவு முதலியன மிகுந்து அவர்களு டைய கூட்டுறவினை அழித்துவிடும் என்பதாம்.

"ஆகவே, உங்கள் நன்மைக்காக ஏற்பட்ட அரசனுகிய என் னுடைய கட்டளைகளுக்குக் கீழ்ப்படிய வேண்டியது உங்களுடைய முதற்கடமையாகும். ஒரு சிறிய வீட்டுத்தலைவன் சொல்லைக் கேளாத சிலமக்களே பெருந்துன்பம் அடைவார்களானல், பெரிய நாட்டுத்தலைவன் சொல்லைக் கேளாத பலமக்கள் எப்படித் தீங் கின்றி வாழக்கூடும்? நாட்டுமக்களாகிய உடலுக்கு அரசன் தலை யாக விளங்குகிறான். தலையில்லாத உடல் சாவதுபோல அரச னில்லாத நாடு அழியுமன்றோ? நான் உங்களால் ஏற்படுத்தப்பட்ட அரசனுயினும் உங்கள் நன்மையை வேண்டி என்னை நீங்கள் சிறிது உயர்வாகவே நடத்த வேண்டும். ஞாயிறு உயர்வான இடத்திலிருப்பதால் உலகமெங்கும் ஒளியைக்கொடுக்க இயலு கின்றது. ஆறுகளும், ஏரிகளும் வயல்களைக் காட்டிலும் உயர் வான பாகத்திலுள்ளமையாலன்றோ வயல்களுக்குத் தண்ணீர்ப் பயன் கிடைக்கின்றது.

"ஞாயிறு வெப்பத்தையும், குளிர்மதி களங்கத்தையும், மேகம் இடியினையும், பூக்கள் முட்களையுங் கொண்டிருக்கின்றன. யானும் அவற்றைப்போன்று கடவுளால் படைக்கப்பட்ட ஒரு மகனுகலின், என்பாலும் என்னை யறியாமலே சில குற்றங்கள் இருக்கலாகும். அவற்றிற்காக நீங்கள் என்னை வெறுக்காது, வேண்டுகோள்களின் வழியாக அவைகளை எனக்குத் தெரிவித்து விலக்கிக் கொள்வீர்களாக! யான் செய்யுங் காரியங்களில் சில வற்றிற்குத் தக்க காரணங்கள் சில சமயங்களில் உங்கட்குப் புலப் படாமற் போகக்கூடும். அப்பொழுது நீங்கள் என் காரியங்களின் பயனை எதிர்பார்த்துப் பொறுமையை மேற்கொள்ள வேண்டும். அங்ஙனமின்றி விபரீதமாக எண்ணி, இராஜத் துரோகத்தைக் கன விலும் நினைக்காதிருப்பீர்களாக! சைவசமயம் தழைத்தோங்கிய நமது பாண்டி நாட்டில் அமணர்கள் புகுந்து செய்த அட்டுழியங் கள் யாவும் நீங்கள் அறிந்தனவே. அவைகள் இனி நமது நாட்டில் தலையெடுக்க வொட்டாமற் செய்ய வேண்டியது எனது அரசாங் கத்தின் முதல்வேலையாகும். ஆயினும், சமண சமயத்தார்க்கோ, அன்றிப் பிறசமயத்தார்க்கோ எனது அரசாங்கமும், எனது குடி களும் எவ்விதமான தீங்கையும் செய்ய நான் சிறிதும் இணங்கேன்.

அயல் நாட்டவர்கள் அனைவரும் இப்பொழுது அமணர்களாயிருப்பதால், அவர்களின் படையெடுப்பை ஒவ்வொரு நொடிப்பொழுதிலும் நாம் எதிர்பார்த்த வண்ணமாக நிற்கவேண்டியவர்களாய் இருக்கிறோம்.

"ஆகையால், பாண்டிமக்களாகிய நீங்கள் அனைவரும் போர்க்குப் புறப்பட எப்பொழுதும் ஆயத்தமாக இருக்கவேண்டும். இது தற்காப்புக்கு வேண்டிய ஒன்றே யொழிய இரத்தவெறி கொண்டதன்று. போர் என்பது அரசர்களுக்கு ஊக்கத்தைக் கொடுக்கக்கூடிய ஒன்றாயினும் நான் அதை மிக வெறுக்கின்றேன். போர் என்பது நாடுகளுக்குத் தொற்று நோய் போன்ற ஒன்றாம். இஃது எங்கேனும் ஒரு நாட்டில் தோன்றிவிட்டால், பல நாடுகளும் அதற்கு இரையாவது திண்ணம். ஆகலான், எனதாட்சியைப் போரின்றியே நடத்தப் பெரிதும் முயல்வேன். பொதுவாக அரசாட்சியானது குடிகளின் வரிப்பணத்தாலேயே நடைபெறுகின்றது. குடிகள் வரிகொடுக்க மறுத்தால் அரசாட்சி நடப்பது அரிதாகும். வயிறுபோன்ற அரசாங்கத்திற்கு அவயவங்களாகிய குடிகள் உணவு போன்ற வரிகளைச் செலுத்தாமல் இருப்பது பெருந்தவறாகும். எனது அரசாங்கம் வாங்கும் வரிகள் மிகக் குறைவாய் இருப்பதோடு, அவைகள் பெரும்பாலும் உங்களின் நன்மைக்காகவே செலவிடப்படும். ஒரு அரசாங்கம் எவ்வளவு வலியுடையதாயினும், குடிகளின் ஒத்துழைப்பு இல்லாவிட்டால், அச்சாணியில்லாத் தேர்போல் நடவாது. ஆகையால், நீங்கள் எனது அரசாங்கத்தோடு ஒத்துழைத்துப் பாண்டிநாட்டைப் பண்படுத்துவீர்களாக! எல்லாம்வல்ல சொக்கலிங்கப் பெருமான் முன்னின்று நம்மை நல்வழியில் நடத்தியருள் புரிவாராக."

அன்றுமுதல் மூர்த்தி நாயனர் பாண்டிநாட்டைப் பரிபாலிக்கத்தொடங்கி, நல்லவிதமான சட்ட திட்டங்களை உண்டு பண்ணினர். நல்ல அமைச்சர்கள் பலர் அமர்த்தப்பட்டனர். நாயனர் எந்த நேரத்திலும் யாரும்காணும்படி காட்சிக் கெளியராய் விளங்கினர். அவர் கண்களில் அருள் பொங்கி வழிந்து கொண்டிருந்தது. குடிகளின் குறைகளைக் கேட்பதில் அவருடைய காதுகள் விருப்பம் மிகக் கொண்டன. உண்மையும், இனிமையும் நிறைந்த சொற்கள் அவருடைய நாவில் குடிகொண்டிருந்தன. அமணர்

கள் செய்திருந்த அட்டூழியங்கள் பலவும் அவரால் நீக்கப்பட்டன. பாண்டி நாட்டினுக்குப் பயிர்த்தொழில் இன்றியமையாத ஒன்றுகையால், அவர் வையையினையும் தாமிரபர்ணியினையும் சீர்திருத்தினர். அணைகள் பல கட்டப்பட்டன. வாய்க்கால்கள் பல வெட்டப்பட்டன. குளங்கள் தோண்டப்பட்டன. ஏரிகள் அமைக்கப்பட்டன. வாணிபம் செம்மையுற நடக்கும் வண்ணம் வணிகர்களுக்கு வேண்டிய பாதுகாப்பினை அவர் உண்டாக்கினர். பழமையான பாலங்கள் மதகுகள் முதலியன அவரால் புதுப்பிக்கப்பட்டன. புதிய பாதைகள் பல அவரால் உண்டாக்கப்பட்டன.

குருடர், முடவர் முதலிய அங்கவீனர்களுக்கும், பாடுபட முடியாத பழங் கிழங்கட்கும், பெண்களுக்கும், நோயாளிகட்கும், திக்கற்ற குழந்தைகளுக்கும், மிகுந்த ஏழைகளுக்கும் பல அறச்சாலைகளை அவர் தோற்று வித்தார். ஊர்கள் தோறும் அவர் வைத்தியசாலைகளையும், மருந்துச்சாலைகளையும் வைத்து, ஏழைகளுக்கு இலவசமாக வைத்தியஞ் செய்ய ஏற்பாடு செய்தார். நாடெங்கும் பள்ளிக்கூடங்களும், கலாசாலைகளும் அவரால் உண்டாக்கப் பட்டன. அங்கு இலக்கணம், இலக்கியம், கணக்கு, சமயம், பூகோளம், ககோளம், தேசசரித்திரம் முதலியவைகள் படிப்பிக்கப்பட்டன. அங்குள்ள மாணவர்களுக்கு உண்மையுரைத்தல், நாணயமாய் நடத்தல், நீதிநெறியில் நிற்றல், கடவுட்பக்தி, பிறர்க்குதவிபுரிதல், செய்ந்நன்றியறிதல் முதலிய நற்குணங்கள் கட்டாயபாடமாகக் கற்பிக்கப் பட்டன. பணங் கொடுத்துப்படிக்க இயலாதவர்களுக்கு இலவசமாகப் படிக்கும்படி அறப்பள்ளிகள் பல அமைக்கப்பட்டன. வயிற்றுக்கில்லாத மாணவர்களுக்கு இலவசமாக உண்ணும்படி உணவுச்சாலைகளும், சிற்றுண்டிச்சாலைகளும் ஏற்படுத்தப் பட்டன. இன்னும் அவர் சைவசமயத்தைப் பரப்ப வேண்டி ஆங்காங்கு மடங்கள் பல கட்டுவித்து, இறையிலியாகப் பலகிராமங்கள் விட்டு வைத்தார். அம்மடங்களில் சைவசமய அறிவாளிகள் பலர் வைக்கப்பட்டனர். சொக்கலிங்கப் பெருமான் கோயிலிற்குப் பல கிராமங்கள் இறையிலியாக விடப்பட்டன.

இளைஞர்களுக்கு உடல்வலிவும், உரமாகிய நெஞ்சு முண்டாக வேண்டி, பாண்டி நாடெங்கும் பல சிலம்பக்கூடங்களும், உடற்பயிற்சி செய்யுமிடங்களும், போர்த் தொழிற் பள்ளிகளும் உண்டாக்கப்பட்டன. சிற்பம், நெசவு, தச்சு முதலிய பலவிதமான

கைத்தொழில்களும் மேன்மையுறும் வண்ணம் பல கைத்தொழிற் சாலைகள் நாடெங்கும் கிளைத்தன. பெருவழிகளின் இடைக் கிடையே வழிப்போக்கர்கள் தங்குவதற்கு வேண்டிச் சத்திரம், சாவடிகள் பல முளைத்தன. நகரங்களிலும், ஊர்களிலும் குப்பை கூளங்கள் மக்களின் பார்வையிற் படாதபடி அப்புறப்படுத்த வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டன. பெயர்போன புலவர் களுக்கும், அருமையான தொழிலாளிகளுக்கும், நியாயமான சமயவாதிகளுக்கும் மூர்த்திநாயனர் வெகுமதிகளும் உபகாரச் சம்பளங்களும் கொடுத்து வந்தார்.

மூர்த்திநாயனர் தமது அரசாங்கத்திலுள்ள கொடியர் களாகிய அதிகாரிகள் பலரை விலக்கி, திறமையும் ஒழுங்கும் உள்ளவர்களைத் தேடி அமர்த்தினர். இலஞ்சம் வாங்கும் அதிகாரி கள் பலர் அவரால் தண்டிக்கப்பட்டனர். இலஞ்சம் கொடுக்கிற வர்களைத் தண்டிக்கிறதென்ற சட்டத்தை மூர்த்திநாயனர் அறவே கைவிட்டார். மூப்பு பிணி முதலிய காரணங்களால் வேலை பார்க்கமுடியாத அதிகாரிகளுக்கு அவருடைய அரசாங்கம் உதவிச் சம்பளம் கொடுத்து வந்தது. அகால மாணமடைந்த அதிகாரிகளின் குடும்பங்கட்கு வேண்டிய பாதுகாப்புகள் உண் டாக்கப்பட்டன. இவற்றல், இலஞ்சம் வாங்குகிற அதிகாரிகளைப் பாண்டிநாட்டில் காண்பது அரிதாயிற்று. ஞாயிறு தன்னுடைய ஒளியினல் எல்லாப் பொருள்களையும் பிரகாசிக்கச் செய்வது போல, மூர்த்திநாயனர் தம்முடைய நற்குணங்களால் குடிகளின் குணங்களைத் திருத்தி நல்வழியில் நடக்கச் செய்தார். நாடெங்கும் சைவசமயமும் நல்லொழுக்கங்களும் செழித்து ஓங்கின. முன் போல் திருவிழாக்கள் நடைபெற்றன.

இவ்விதம் நடத்திய நாயனரின் நல்லாட்சியால் பாண்டி நாட்டுமக்கள் பலவிதத்திலும் மேன்மையுற்றனர். நாயனர்க்கு நாடெங்கும் அரணாயின; குடிமக்களெல்லாம் படைமக்களாயினர். அவர்களுடைய நெஞ்சகமெல்லாம் மூர்த்திநாயனர்க்கு அரண் மனையாய் அமைந்தன. மூர்த்திநாயனர் எவ்விதமான காவலு மின்றி நாடெங்குந்திரிந்து குடிகளுக்குள் அன்பினையும் அருளினை யும் மிகும்படி செய்தார். வரிப்பணத்தில் பெரும் பாகத்தை விழுங்கும் படைச்செலவு ஒழிக்கப்பட்டது. பாண்டிநாடெங்கும் அமைதி குடிகொண்டது; சைவம் தழைத்தோங்கியது. பாண்டி

மக்களின் மேனிகளில் திருநீற்ருெளியும், சிவமணிமாலைகளும் காணப்பட்டன. சடைமுடிதரித்த அடியார்கள் பலர் பாண்டிநாடெங்கும் திரிந்து மக்களைப் பண்படுத்தினர். மூர்த்திநாயனர் இங்ஙனம் நெடுங்காலம் பாண்டிநாட்டை ஆண்டு கொண்டிருந்து முடிவில் சொக்கலிங்கப்பெருமான் திருவடி நிழலிற் சேர்ந்தருளினுர்.

முற்றும்

---

# போர்க் கருவிகள் போந்த புதுமை

## பீரங்கி வகைகள்,

[காழி. சிவ. கண்ணுசாமி B. A.]

நாற்பதைம்பது ஆண்டுகட்கு முன்கூடப் பீரங்கிகள் வார்ப்பிரும்பு என்று சொல்லும்படியான மட்ட இரும்பினுலேயே செய்யப்பட்டுவந்தன. இம்மட்ட இரும்பு கனிகளிலிருந்து அகப்படக்கூடிய இயற்கை நிலையிலேயே கரிச்சத்து அதிகஞ் சேர்ந்திருப்பதால் உருக்கி ஊற்றுவதற்கு எளிதாயும் விலை நயமாகவுமிருக்கிறது.

இத்தகைய இரும்பினுல் செய்யப்படும் பீரங்கிகள் உருக்கி ஊற்றப்படும் எளிமையால் விரைவில் அதிக உழைப்பின்றி எண்ணிலவாகச் செய்யப்பட்டு வந்தன. ஆனுல் அவைகள் உட்கெட்டிக்கப்படும் குண்டுகளின் வெளிச்செலவினுலய சூடு தாங்காமல் அடிக்கடி மேற்பொரிந்து வீறலிட்டு வந்தன. இற்றைநாளிற் கையாளப்படும் பூதவெடிச்சிகளை (Giant shells) யொத்த குண்டுகளை இப்பீரங்கிகளில் வைத்து வெடிக்க முயன்ருல் பீரங்கிகள் தூள் தூளாகச் சிதறி வெடிக்க முயன்றவர்களின் உயிருக்கே உலைவைத்துவிடும் என்று கூறவேண்டுவதில்லை.

இப்பீரங்கிகள் சிறிய குழாய்களை யுடையனவாயும், குண்டுகளைச் சிறிதுதூரமே விசையுடன் செலுத்தக்கூடியனவாயும் அமைந்திருந்தன. நாளாவட்டத்தில் இவைகள் மேற்கூறியவாறு பொரிந்து வீறலிடாவண்ணம் அவற்றின்மீது பலவிடங்களில் தண்டவாளமென்று சொல்லப்படும் பதன்செய்யப்பட்ட இரும்பினுலாய கட்டுகளிடப்பட்டுவந்தன. சூடேறவேற இக்கட்டுகள்

இளகி நீண்டு கொடுக்குமே தவிரப் பொரிந்து சிதறுவதில்லை. ஆயினும், இதுவும் கருதிய அளவுக்குப் பயன்தருவதாயில்லை. வார்ப்பிரும்பைப்போல் எளிதில் உருக்கி ஊற்றக்கூடியதாயும் ஆனல் தண்டவாளத்தையொத்து வலிவும் அதிர்ச்சிக்கெதிர் நிற்கும் ஆற்றல் படைத்ததாயுமுள்ள ஒருவகை இரும்புருக்கைக் கண்டு பிடித்தாலொழிய பீரங்கிசெய்யுமுறை வளர்ச்சியுறுவதற்கு வகை யில்லாததாக இருந்துவந்தது.

திரு. ஹென்ரி பெஸ்ஸமர் என்ற வெண்கலப்பொடி வணிகர் ஒருவர் பெருஞ்செல்வம் படைத்திருந்தாராதலால் இத்துறையில் அவர் தங் கருத்தைச் செலுத்தி, உருக்கி ஊற்றின இரும்பினூடே காற்றைச் செலுத்தினல் இரும்பினேடு கலந்திருக்கும் கரிச்சத்து எரிந்து குறைந்து அவ்விரும்பு வார்ப்பிரும்பைவிடத் திண்மையு முரனு முடையதாயிருக்கும் எனக் கண்டுபிடித்தார். அவர் கண்டு பிடித்த இம் முறையில் எரிகந்தகத் தோற்றத்தாலாகிய இரண் டொரு குறைகளிருந்ததையும் தாமஸ் என்ற உவேல்ஸ் நாட்டின ரொருவர் தம் அறிவாற்றலினல் நீக்கிச் செம்மைப்படுத்தினர். இவர்களிருவருடைய முயற்சியின் பயனய்க் கண்டுபிடிக்கப்பட்டுப் பயன்பட்டுவரும் உருக்குக்குப் "பேஸிக் பெஸ்ஸமர் உருக்கு" என்று பெயர்.

கனியிலிருந்து வெட்டியெடுக்கப்படும் இரும்பு ஒருவாறு மாசு நீக்கப்பட்டு வார்ப்பிரும்பாகிறது; வார்ப்பிரும்பு சீர்ப்படுத்தப் பட்டு உருக்காகிறது ; உருக்குச் செம்மை செய்யப்பட்டுத் தண்ட வாளமாகிறது. வார்ப்பிரும்பில் நூற்றுக்கு 2 முதல் 5 வீதம் கரிச்சத்திருக்கிறது ; உருக்கிரும்பில் நூற்றுக்கு ஏறக்குறைய மூன்று வீசம் முதல் 1 வீசமே கரிச்சத்திருக்கிறது ; தண்டவா ளத்திலோ நூற்றுக்கு மூன்று வீசத்திற்குக் குறைவாகவே கரிச் சத்திருக்கிறது.

கரிச்சத்து எவ்வளவுக்கெவ்வளவு குறைகின்றதோ அவ்வள வுக்கவ்வளவு இரும்பு உரனுறுகின்றது என்று மேலே கூறினேம். உருக்கில் வேண்டுமளவு கரிச்சத்தைக் கூட்டியோ குறைத்தோ சீர்ப்படுத்திக் கப்பல்கள், பாலங்கள், கூரைத்தகடுகள், வெடிச்சிகள், துப்பாக்கிகள், பீரங்கிகள் முதலியன செய்யப்படுகின்றன. செம்பு செம்பாகவே பயன்படும்; துத்தநாகம் துத்தநாகமாகவே பயன் படும்; ஈயம் ஈயமாகவே பயன்படும்; ஆனல் இரும்போ கரிச்

சத்தைக் கூட்டியும் குறைத்தும் சீர்ப்படுத்தப்படுவதால் எண்ணிறந்த துறைகளில் எண்ணிறந்த வகையாக உருக்கப்பட்டு மாறிப் பயன்பட்டுவருகிறது. உண்மையில் இரும்பைக் "கனியாசன்" என்றே கூறினும் அது பிழையாகாது.

## பீரங்கி வகைகள்

நிலப்போரிற் பயன்படும் பீரங்கிகளுக்கும், கடற்போரிற் பயன்படும் பீரங்கிகளுக்கும் அமைப்பில் பல வேறுபாடுகளுண்டு. கப்பலின் உருவமைப்புக் கேற்றவாறு கடற்பீரங்கிகள் நீளங் குறைத்தோ கூட்டியோ செய்தமைக்கப்படுகின்றன. பீரங்கி வாயின் குறுக்களவுக்கு இத்துணைமடங்கு பெரிதாகத்தான் பீரங்கியின் குழாய்களின் நீளமமைந்திருக்கவேண்டும் என்ற ஒரு நியதியுண்டு. இந்த நியதிக்கு அதிகப்பட்டதாகவே கடற்பீரங்கிகள் எப்பொழுதுங் காணப்படும். எவ்வளவுக்கெவ்வளவு குழாய்கள் நீளமாக இருக்கின்றனவோ அவ்வளவுக்கவ்வளவு விசையாகவும் தூரமாகவும் அவைகள் குண்டுகளையும் வெடிச்சிகளையும் வெளிச் செலுத்தும் ஆற்றல் வாய்ந்திருக்கும் என்பது ஈண்டு நோக்கற்பாலது.

நிலப்போர் பீரங்கிகளோ நீளங் குறைந்ததாகத்தாம் இருக்கும். இன்றேற் போர்க்களத்திடை அவைகள் வேண்டுமிடங்கட்கு இழுத்துச் செல்லப்பட்டுப் பயன்படுதல் கடினமாகும். குதிரைகள் கட்டிய இருப்புருக்கு வண்டிகளில் அவைகள் ஏற்றப்பட்டுக் காலாட்படைகள் செல்லுமிடங்கட்கெல்லாம் பின்னுலேயே இழுத்துச் செல்லப்பட்டு அவைகள் பெரிதும் பயன்படுகின்றன. இன்னுங் குதிரைப்படைப் பீரங்கிகளோ காலாட்படைப் பீரங்கிகளைவிட எடை குறைந்தவையாயும் விரைவில் இழுத்துச் செல்லக்கூடியனவாயும் அமைந்திருக்கும்.

இஃதிவ்வாறிருக்க, கனமுள்ள பெரியபெரிய பீரங்கிகளைக் கடியவேகமாக இழுத்துச்சென்று பயன்படுத்துவது என்பது மிகவும் விந்தையானதோர் செயலாகும். சென்ற போயர்ப் பெரும் போரில் போயர்கள் தங்கள் பெரிய பீரங்கிகளை ஆங்கிலக் கப்பற் படை வீரர்கள் கண்டு திகைக்குமாறு விரைவிற் கையாண்டு வந்தார்கள். சென்ற ஐரோப்பியப் பெரும் போரிலும் ஆஸ்திரியர்கள் தங்கள் "ஹவிட்ஸர்"களை வெகு எளிதிற் கையாண்டது

போர்த்துறையிலேயே ஒரு பெரிய படிப்பினையாக விருந்தது. லீஜ், நாமூர், மாபோக், ஆன்ட்வர்ப் போன்ற தகர்க்கமுடியாத கோட்டைகள் இமைப்பொழுதில் ஆஸ்திரிய ஹவிட்ஸர்களின் தாக்குதலால் தவிடுபொடியானது ஆங்கிலேயர்கட்கும் அவர்கள் நட்பினருக்கும் முதலில் மாயமாகவே தோற்றிற்று.

இத்தகைய ஹவிட்ஸர்கள் எவ்வாறு முட்டின்றி விரைந்து கையாளப்பட்டுவந்தன ? கடற் பீரங்கிகளையும் நிலப் பீரங்கிகளையும் போல இந்த ஹவிட்ஸர்கள் நீண்ட மெல்லிய குழாய்களோடு கூடியனவா யமைக்கப்படுவதில்லை. இவற்றின் குழாய்கள் குட்டையாயும் கனமாயுமிருக்கும். இதனுல் அவைகள் வேண்டுமிடத்துக்கு இழுத்துச் செல்லப்பட்டுக் கையாளப்படுவது எளிதாகிறது. பீரங்கிகட்கும் ஹவிட்ஸர்களுக்கு முள்ள முக்கியமான வேறுபாடு என்னெனில் பீரங்கி ஒன்றைக் குறித்துச் சுடுகிறது; ஹவிட்ஸரோ குறித்த ஒரு பொருளின்மேல் வெடிச்சி சென்று விழும்படியாக வெடிச்சிகளை வானிற் செலுத்துகிறது.

இனி, தற்காலப் போர்த்துறையில் வழங்கும் பீரங்கி வகைகளில் முக்கியமான சிலவற்றைக் கீழே குறித்து இக்கட்டுரையை முடிப்பாம்.

1. கடற் பீரங்கி: இது பீரங்கிக்குரிய இலக்கணங்களெல்லாம் அமைந்தது. நீளம் அதிகமாய் நீண்ட தூரம் குண்டுகளை விசையாய்ச் செலுத்தக் கூடிய ஆற்றல் வாய்ந்தது. கப்பலிலேயேயன்றி துறைமுகங்களிலுள்ள கோட்டைகளிலும் இத்தகைய பீரங்கிகளே காவலுக்கு அமைக்கப் பட்டிருக்கின்றன. துறைமுகங்களிலுள்ள கோட்டைகளைத் தாக்குவதென்பது கப்பல்கள் மூலமே முடிவதொன்ருகலின் கடற்பீரங்கிகள் அக்கோட்டைகளிலும் பயன் படுத்தப்படல் இயற்கையே.

2. நிலப் பீரங்கி: இஃது காலாட்படைப் பீரங்கி யென்றும், குதிரைப்படைப் பீரங்கி யென்றும் இருவகைப்படும். கடற் பீரங்கிகளைப் போலாக்கப்பட்டு வண்டிகளில் ஏற்றப்பட்டு இவைகள் எளிதில் இங்கு மங்கும் வேண்டியாங்கு இழுத்துச் செல்லக் கூடியவா யிருக்கின்றன.

3. ஹவிட்ஸர்: தற்காலப்போரில் தலைமைகொண்டு விளங்குவது இவ்வகையே. அவ்வப்போருக்கு அவ்வச் சமயத்திற்கு

வேண்டியவாறு பலதிறப்பட்ட அளவுகளுடன் இவைகள் இயற்றப்படுகின்றன; பண்டையநாளைய கோட்டைகளையும், இரும்புக் கப்பல்களையும் நெட்டிகளைப் போற் பெயர்த்தெறியும் ஆற்றல் வாய்ந்தன; பூதவெடிச்சிகளை மைல்கள் கணக்கில் விசையுடன் செலுத்தக் கூடியன. தற்காலப் போர் முறையான அகழிச் சண்டை, அதாவது பள்ளங்கள் குடைந்து கொண்டு அதனுள் மறைந்திருந்து சண்டையிடுவது, இந்த ஹவிட்ஸாராலேயே ஒருவாறு மட்டு படுத்தப் படுகிறது என்று கூறலாம். அத்தகைய குழிகளின் நடுவே பெரிய பெரிய வெடிச்சிகளைக் கண்காணுத இடங்களிலிருந்து எறிந்து வெடிக்கச் செய்து அப்பள்ளங்களைத் தூர்த்தும், முட்கம்பி வேலிகள் முதலியவற்றை யறுத்தெறிந்தும் இதுசேதம் விளைக்கின்றது. காலாட்படைப் போருக்கு இது ஒருபெரிய ஊன்று கோலென்றே கூறலாம்.

4. இயந்திர பீரங்கி: இஃதொவ்வொன்றும் நூறு அல்லது இருநூறு படைவீரர்கட்கு ஒப்பானது என்று கூறலாம். அகழிச் சண்டைகளில் அரணாக இருப்பதும், கட்டப்பட்ட பாலங்களைக் காக்கப் பெரிதும் பயன் படுவதும் இவ்வகையே. ஆனால் காலாட் படைப் போருக்குத்தான் இது பயன் படுமேயொழிய பெரிய பீரங்கிப்படையை யெதிர்த்து நிற்க உதவாது.

5 பீரங்கி உரல்: "அவுட்" என்று நந்நாட்டில் வழங்கும் ஒரு வாணக்கருவியை யொத்து வெடிச்சிகளை வானகத்தே நெடுந்தூரம் வீசி யெறிந்து எதிரிகளின் நடுவே விழச் செய்தற்குப் பீரங்கி உரல் என்ற ஒன்றுங் கையாளப்பட்டு வருகிறது. குழாயின் வாய்வழியாக வெடிச்சியையும் செலுத்து கருவியையும் இவ்வுரலினுள் போட்டவுடன் அவை நேரே உரலின் அடிப்பகுதிக்குச் செல்கின்றன. அங்கே இவற்றை நெட்டி வெளியே தள்ளக் கூடியதாய் ஒரு கருவி யமைக்கப்பட்டிருக்கிறது. அக்கருவியின் மீது இந்த வெடிச்சி வந்து தாக்கிய மறுநொடியில் அஃது எல்லையற்ற விசையுடன் வெளியே தள்ளப்படுகிறது. வெளியே தள்ளப்பட்ட இது நேரே வானளாவிச்சென்று முன்னூறு நானூறு அடிகட்கு அப்பாலுள்ள எதிரிகளின் நடுவே விழுந்து வெடிக்கிறது. இதற்கும் ஹவிட்ஸருக்கு முள்ள வேறுபாடு என்னவெனில் இது முன்னூறு நானூறு அடிதூரமே வெடிச்சிகளை யெறிய ஹவிட்ஸர் மைல் கணக்கில் அவற்றைச் செலுத்துகின்

றன என்பதே. இதனாலேயே ஹவிட்ஸரை "ஸ்கோடா மார்ட்டர்" அதாவது ஸ்கோடா உரல் என்று வழங்கி வருகின்றனர்.

6. "ஆர்ச்சிபால்டு" : என்பது வானவூர்தி (Aeroplane) ஸெப்ளின் முதலிய வானக் கப்பல்களைத் தாக்குவதற்காகப் பயன் படுத்தப்படும் பீரங்கி. இது நீளமாயும், கண்ணாடி ஒளிப்பெருக்கி களும் கண்ணாடிப் பட்டையுருளைகளும் (Prisons) சேர்த்தமைக் கப்படும். இவற்றின் உதவியால் மேலே செல்லும் வானவூர்தி களை நிமிர்ந்து பார்த்தோ, மல்லாந்து படுத்துக் கொண்டோ தொடர்ந்து நோக்கிக் குறிபார்த்துச் சுடவேண்டிய கட்டாய மின்றி இயற்கையிலேயே இருந்த படியே குறிவைத்துச் சுடுதல் எளிதாகிறது. இவைகள் எப்பக்கமும் எவ்வகையிலும் எளிதிற் றிருப்பிக் கையாளப்படக் கூடியவாறு அமைக்கப்படுவனவாகும்.

---

தமிழில் இன்றியமையாது

# வேண்டப்படும் உரைநடை நூல்கள்

(முன் ௬௩௪-ம் பக்கத் தொடர்ச்சி)

("மதிமன்னன்" எழுதியது)

## தேவையென்ன!

எமது நூலாசிரியர் எங்களது தேவைகளையறிந்துளாரென்று யான் கருதக்கூட வில்லை. அறிவு பெருகிவரும் இக் காலத்திற் கேற்பவும், அதிகம் வாசித்தறிய வேண்டுமென்று அவாவுறும் இளைஞர்களுளங்களித்து நிறையுமாறும் போதிய அளவில் புதிய உரைநடை நூல்கள் தமிழில் எழுதப்படவில்லை. "ஆனந்தபோதினி யும்" "ஆனந்த விகடனும்" "அமிர்தகுண போதினியும்" வெளி யிடும் நூல்கள் தமிழ் மக்களுக்கும், மொழிக்கும் நன்மை செய்யுந் தரத்தனவோ வென்பதில் எனக்குப் பெரும் ஐயமுண்டு. செந்த மிழ்க் கொலைஞர் சிலருந் தமிழ் நூலியற்றுகின்றாரெனின் எம்மனோ ரின் பிற்போக்குக்கு வேறென்ன சான்று வேண்டும்? மூன்றாந்தரக் காமக்கதைகளெழுதும் ஓர் 'நூலாசிரியர்' புல்லறிவின் வீக்கத்தால் தன்னை மறந்து இல்வாழ்க்கைநூல் ஒன்றையும் எழுதத்துணிந்து

விட்டார். அதை வாசித்து யானடைந்த நூக்கத்திற்கும், துயருக்கும் அளவேயில்லை. கற்றுருள்ளம் பதைக்குமாறும், கற்புடை மாந்தர் தம்நெஞ்சம் புண்படும் வண்ணமும் அம்மனிதர் முரட்டுத்தனமாய்ப் பலபக்கங்களில் இழிவுரைகள் பலவற்றை வரைந்திருக்கின்றார். ஆண் பெண் தொடர்பு, புணர்ச்சி, கொஞ்சுதல், இன்பவுரையாடல் மக்கட்பேறு அன்ன பிற இல்வாழ்க்கைக் கடுத்த பொருட்களைப் பற்றி தமது காம இச்சையைத் தீர்க்க விலைமகளிர் வீடேகும் தீய மாந்தர் போற்றுவரென் றெண்ணினர் போல அம்மனிதர் எழுதி யிருக்கின்றார். இல்வாழ்க்கைக்குப் பயன்படும் ஒரு சொல்லையே னும், ஒரு சிறிய புதிய கருத்தையேனும் அப்புத்தகத்தில் யான் கண்டேனில்லை. ஆயின் அதனைப்பற்றிய விளம்பரமோ வெனில் இனிய தின்பண்டங்களைக்கண்ட சிறுவர் நாவில் நீர் சொட்டிக் கதிப்பதையொப்ப வெள்ளறிஞர் எளிதில் ஏமாந்து அந் "நூலின்" பெருமையைப் பற்றிப்பேசும் முறையில் எழுதப்படுகின்றது. இத் தகைய கவைக்குதவாத 'நூல்களே' இக்காலத்தில் மலிந்து வரு கின்றன. எவ்வாறு புராணங்கள் எஞ்சமய, தத்துவ நூற்களின் மேன்மையைக் குறைத்தனவோ அவ்வாறே இப்புதிய "நூல்கள்" பண்டைத் தமிழ் நூல்கள், அறிஞர் எழுதி வெளியிடும் அறிவு நூல்கள் முதலியவற்றின் சிறப்பையும், தனி மாண்பையும் கெடுத்து வருகின்றன.

இவற்றைத்தடுக்க முற்படவேண்டாமா? யார் அவ்வேலையைச் செய்யத்தகுதியுடையோர்? தமிழறிஞரே இத்திருப்பணியைக் கையேற்றல் வேண்டும். சந்தையில் நல்ல பொருட்களிருந்தால், அழுகின பண்டங்கட்கு விலையில்லை யன்றோ? அவ்வாறே தமிழறி ஞர்கள் முனைந்து உழைத்து சிறந்த உரைநடை நூற்கள் வரைந்திடல் வேண்டும். மறைமலையடிகள், திருவாளர்கள் கலியாணசுந்தரர், கா. சுப்பிரமணிய பிள்ளை, சேதுப்பிள்ளை, பூரணலிங்கம் பிள்ளை, சுவாமி விபுலானந்தர், பண்டித வேங்கடசாமி நாட்டார் ஆதிய பேரறிஞர்கள் தமிழில் உரைநடை நூற்கள் எழுதத் தொடங் குவரேல் நூற்பஞ்சத்தால் உடல் நலிவுற்றிருக்கும் எந்தமிழ் அன்னை பொலிவுடன் இலங்காளோ? அங்ஙனமாயின் வெள் ளறிஞர் தம்போலி "நூல்" களுக்கு விலையும், மதிப்பும் கிட்டுமோ? இதுகாறும் பல சிறந்த நூல்களை வெளியிட்டுள்ள சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம் இன்னுஞ் சற்றுத் தாராள

உணர்ச்சியுடன் சைவசமய நூற்களையன்றி ஏனைச் சமய நூற்களையும் வெளியிடக்கூடுமேல் அக்கழகம் தமிழுக்குப் பேருதவி புரிவதாகும். உண்மையில் சமய நூற்க ளனைத்தும் செய்யுளி லிருக்கின்றமையால் எல்லோரும் சமய அறிவு பெறுத லரிதாகின்றது. சமயம், தத்துவம், மொழியாராய்ச்சி, மருத்துவம், சரித்திரம், கதை ஆகிய துறைகளில் யான் குறித்த சிமான்கள் நூல்கள் ஆக்குவாராயின் தமிழ்மொழி பரந்து விரிந்து, செழித்துக் கொழுத்து வலுவடைந்து வரும். சைவ சமயம், வைணவம், இசுலாம், பௌத்தம், கிறிஸ்தவம், சமணசமயம், வேதாந்தக்கொள்கைகள், பகவத்கீதை, ஆரிய பிரம்மசமாசங்களின் கோட்பாடுகள், பிரம்மஞானசபையின் விதிகள் ஆதியன செந்தமிழில் உரைநடை நூற்களாக ஆக்கப்பெறின் எந்தமிழ்மொழி சிறப்பெய்தும் என்பதில் ஐயமேது? அன்றியும், கீழ்நாட்டு மேனாட்டுத் தத்துவ உணர்ச்சிகளைப்பற்றிய தமிழ் உரைநடை நூல்கள் எத்துணை இன்றியமையாதவை? பிளேற்றோ, சோக்கிறேற்றசு போன்ற அறிஞர்களது அறிவுக் களஞ்சியங்கள், கிறேக்க, உரோம, எகிப்திய சீனதேயச்சரித்திரங்கள் முதலியன செந்தமிழில் உரைநடை நூற்களா யிருந்தால் எவ்வளவு அழகாக விருக்கும்! மேனாட்டுக் கலைகளைத் தமிழில் மொழிபெயர்ப்பதென்றோ? நேற்றுப்பிறந்த மொழிகள் அகில உலகினராலும் போற்றப்படுகின்றனவே! பழம் பெருமை பேசி யாம் வீண்காலம் போக்கிக்கொண் டிருந்தால் தமிழ் மொழி என்றோ உயர்வடைவது? மெக்காலேபோன்றார் எழுதியுள்ள கட்டுரைக் கொத்துகள் ஒன்றல்ல பல தமிழில் வேண்டும். றோபின்சன்குருசோ என்ற கதைபோன்றதோர் முதனூலைத் தமிழில் ஆக்கத் தமிழ்ப் புலவர் ஒருவரேனு மில்லையோ? பிறநாடு சுற்றும் அவா, துணிவு, நெஞ்சுத்திடன், அச்சமின்மை முதலிய நலன்களை விளக்கிப் படிப்பிக்கும் நூல்கள் வேண்டும். வள்ளுவனும், இளங்கோவனும் சீத்தலைச் சாத்தனும் தமிழகத்தில் மீண்டும் பிறக்கவேண்டும். அன்றியும் பெர்னாட்ஷாவும் உவெல்சும் தமிழ்நாட்டில் உரங்கொண் டெழுந்து நூலியற்றவேண்டும். தற்கால இளைஞருளங்களைக் கவரும் நூதன நன்பொருட்கள்பற்றித் தமிழில் நூலில்லாதது ஒரு பெருங் குறையேயாகும். அதனை நீக்குதல் தமிழறிஞர்தங் கடன்.

ஆங்கிலங்கற்ற தமிழ் இளைஞர்கள் தமிழ் நூற்களைக் கற்கின்றார்களில்லை. தமிழ் மொழியைப் பழிக்கின்றார்களென்று தமிழ்ப்

புலவர்கள் குறைகூறி முறையிடுகின்றார்கள். ஆனால் நானறிந்த மட்டில் அறிஞரே குறைகூறப்படவேண்டியவர். அவர்கள் இளை ஞர்களது அறிவுப் பசியை யாற்றுதற்குப் போதிய உணவளியா திருக்கின்றனர். தமிழ்ப்புலவர்கள் Supply and Demand என்ற ஆங்கிலச் சொல்லின்படி புது நூல்கள் பல வரைந்து—அவை உரைநடையி லிருத்தல்வேண்டும்—தமிழ் இளைஞருக்கு அளித்தால் அவர்கள் வாசித் தின்புறுவர், தமிழ்மொழி சிறப்புறும், புலவர் மதிப்படைவர், நல்ல ஊதியமும் அடையலாகும். தமிழ்நாட்டைப் பற்றிய திட்ப நுட்பமான சரித்திர நூல் ஒன்றேனு முண்டோ? தன் தாய் நாட்டைப்பற்றி யறிய அவாவும் தமிழ் இளைஞன் பல ஆங்கில நூல்களைப் படிக்கவேண்டியதாகின்றது. படித்தும் பயனில்லை தெனாலிராமன் சித்திரம் வரைந்ததை யொப்பத் தலையோர் பக்கமும், காலோர் புறமும், வாலோர் திசையிலும் சிதைந்து சிதறிக் கிடக் கின்றது தமிழ்நாட்டுச் சரிதம். அவற்றை யொருங்கு திரட்டி ஒரு பெரும் நூலாக வெளியிடப் புலவர்கள் முற்படலாகாதா? "தமிழ் இந்தியா" இயற்றிய திரு. பூரணலிங்கம் பிள்ளையவர்கள் தலைமை யில் ஏனைய அறிஞர்கள் ஒன்றுகூடி இன்றியமையாது வேண்டப் படும் தமிழ்நாட்டுச் சரித்திரத்தை ஆக்கவியலாதா? இஃது தமிழறி ஞர் கருத்தைக் கவரத்தகுமோர் மிக மிக முக்கிய பொருள். அவர் சிந்திப்பாரோ?　　(தொடரும்)

# ஔவையாரின் வரையறை மொழிகள்

## I

## போனகமென்பது தானுழந் துண்டல்

[திரு. சேலை. சகாதேவ முதலியார்]

ஒருவன் தன் உடல் உழைப்பின் பயனைப் பெற்று உண்பதே உணவெனப்படும். எவனும் பிறர் உழைப்பினால் வந்த பொருளைக் கொண்டு தான் உண்டு காலங் கழித்தல் உண வாகா தென்னும் உயர் ஒழுக்கம் இதனாற் பெற்றும். எனவே தந்தை முதலியோர் தேடிவைத்த பொருளைக்கொண்டு செய்யும், பாடற்ற உயிர்வாழ்க்கையால் ஒருவன் உண்மைப்பயன் அடை யான் என்பது திண்ணம். தந்தை யனுபவித்து எஞ்சிய மிக்க பொரு

ளைத் தனயன் யாது செய்யவேண்டு மெனின், அவன் அதனை அழிக்காது முதலாக வைத்துக் கைத்தொழில் முதலிய அறச் செயல்களை நடத்தி, அவற்றால் வரும் ஊதியத்தைக்கொண்டு நல் வழியிற் செலவுசெய்து, புகழெய்தி இன்புற்று வாழ்ந்து, இம்மை மறுமைப்பயன்களை யடையவேண்டும். இவ்வாறு அறச்செயல் களை நடாத்துதலில் தனயன் எவுதற் கர்த்தாவாக நின்று அவை களைத் தானே முன்னின்று நடத்தி, எய்தும் ஊதியப் பொருளி னின்றும் தானும் தன் வேலையைப் பொறுத்ததொரு பாகம் மட்டும் பெற்று, அதனாலே தன் குடும்பத்தையும் நடத்திப் பெருமை யாகவே உயிர்வாழலாம்.

இவ்வாறு உழைப்பை மேற்கொள்ளாது தந்தை தேடிவைத்த பொருளை அழித்துக் காலங்கழித்து இறுதியிற் றுன்புறுதலும், உற்றார் உறவினர்க்குப் பொறையாக அவர்தம் இல்லங்களில் உண்பதும் உறங்குவதுமாகவே இருந்து உடலோம்புவதும், உத்தியோக முறையில் கண்காணிப்பவர்களை வஞ்சித்து வேலை செய்வதுபோல நடித்துக் காட்டித் திங்கள் முதலில் சம்பளம் பெற்று உண்டு பொய்ம் மகிழ்ச்சி யடைந்திருத்தலும் தானு முந்துண்டல் ஆமோ!

சிலர் பிறரை எமாற்றியும், சூதாடியும், அளவு கடந்தவட்டிப் பணம்பெற்றும், மனைவியின் உழைப்பின் பயனைப் பங்கிட்டுக் கொண்டும், தெய்வபத்தன் போன்று வேடந் தரித்துப் பிச்சை யெடுத்தும், இச்சை பேசியும், இன்னும் இவைபோன்ற பற்பல அற்பவழிகளை மேற்கொண்டும் உடலோம்பி உயிர்வாழ்கின்றனர். இவையும் தானுழந் துண்டலின்பாற் படாவாம்.

உழைப்பாளி யொருவன் 'நமக்கு நாளைக்கு உணவு எங்ஙனங் கிடைக்கும்' என்கிற ஏக்கங் கொள்ளான்; 'இவ்விடத்தை விட்டால் மற்றெவ்விடம் போய்ப் பிழைப்பது' என்னும் மனச் சோர் வடையான்; கிடைத்த ஊதியம் 'நமக்குப் போதாதே' என்று இரங்கலுக் கிடங்கொடாது கிடைத்ததே கொண்டுவப் பான்; உண்மை வியர்வை நெற்றியிலொழுக ஒரு வேலையைத் துவக்கி மனவூக்கத்துடன் அதனைத் திருந்தச் செய்து முடித்து, கிடைத்த ஊதியத்தினால் உணவுப் பொருள்கள் கொண்டுண்டு, இரவில் மெய்ம்மறந்து நற்றுயில்கொண்டு, வருந்தி உழைத்ததனு

லாகிய மகிழ்ச்சியையடைந்து, எவனுக்கும் எவ்விதத்திலும் கடனாளி யாகாமல் ஏறுபோற் பீடுநடை யுடையவனாவான்.

'உழைப்பேன்; குடும்பத்தை யோம்புவேன்; எவன் கீழும் குடியிரேன்; எவ்வேலையும் ஒவ்வியதே; கூடாதவேலை எனக் கொன்று மில்லை; எவர் புகழ்வரோ, எவர் இகழ்வரோ என்றெண் ணேன்; எடுத்த வேலையை முடித்தன்றி விடேன்' என்று உழைப் புக்கு அஞ்சாதவனிடம் உணவு வழிதேடிச் சென்றடையும். உழைப்பின் அளவே உண்மை யின்பம்; உழைப்பின்மையே வறுமை; மடியே குடியைக் குன்றச் செய்யும்; உழைப்பினால் வந்ததை உண்டு எஞ்சியதை அஃது இயலாதார்க்கு ஈவதே ஈகை யாகும்; மெய்வருத்தின கூலிக்கு ஊழ்வேண்டா—என்னும் அநுபவ மொழிகளை உழைப்பாளி பொன்போற் போற்றுவான். உலகமாகிய உலைக்களத்தில் வாழ்க்கையாகிய பட்டடையின்மேல் உழைப்பென்னும் சம்மட்டியால் ஒருவனது செல்வம் உருப்பட வேண்டும் என்பதையும் அவன் நன்கறிவான்.

உழைப்பின் வாரா உறுதிகளுளவோ !

நிற்க, உணவிற் சிறந்த வுணவெது வென்னுங் கடாவிற்கு விடை நால்வகைத்தாய அறுசுவை யுண்டியோ, பச்சடி பாயசங்கள் கூடிய பத்துவகைக் கறிகளுடன் படைக்கப்படும் அமுதோ, முக்கனியோ, இவையாவு மன்றித் தேவாமிர்தந் தானோ: இவைகளில், ஒன்றோ, எல்லாமுமோ எனின் ஒன்று மன்று எல்லாமு மன்று. இக்கடாவிற்கு நேர்விடை, நெல்லிக்கனி யுண்டு நெடுநாள் வாழ்ந்த மெல்லியலாராகிய நல்லிசைப் புலமை நரை மூதாட்டியாரே. அதுதான் அது என்று எல்லைகட்டிச்சொல்ல வல்லவர். அவ்வாறு அவர் தமிழுலகிற்குத் தந்து மக்கள் உள் ளுணர்ச்சியை ஊன்ற ஊட்டிய மொழி—போனக மேன்பது தானுழந் துண்டல்—என்பதே. இத்தகைய மொழிகளை இன் னும் ஆராய்ந்தெடுத்து அருமையாகக் காட்டுவாள் நஞ் செந்தமிழ்ச் செல்வி.

---

# புலவர்கள் ஆதரிப்பு

(திரு. C. M. இராமச்சந்திர செட்டியார் அவர்கள்)

கவிசரிதத்தில் இதர பாஷைகளில் நடந்ததைப் போலவே தமிழிலும் ஆதியில் மன்னர்களால் புலவர்கள் போற்றப்பட்டு ஆதரிக்கப்பட்டனர். சங்க நூல்களினால் பெரும்புலவர்கள் சேர சோழ பாண்டியர்களால் எவ்வாறு அவர்கள் தம்மீது இயற்றிய கவிகளுக்காகப் பரிசு அளிக்கப்பட்டு ஆதரிக்கப்பட்டனர் என்பது தெரியவரும். நாடு, கிராமம், நிலம், பொன், யானை முதலிய பெரும் பரிசுகள் தாராளமாக அவர்களுக்கு முற்றூட்டாகக் கொடுக்கப்பட்டன. சிற்சில பரிசுகளின் மதிப்பை ஆலோசித்தால் நம்பக் கூடாததாய்த் தோன்றும். கபிலருக்குச் சேரன் செங்குட்டுவன் கொடுத்த பரிசுக்கு இணை என்ன இருக்கிறது! காளிதாசர் காலத்து 'அட்சாலட்சத்துக்கு' இணையாகக் கொள்ளலாம். பின்னல் வந்த கம்பர், புகழேந்தி, ஒட்டக்கூத்தர் முதலியோரும் அரசர்கள், குறுநில மன்னர், பெருஞ் செல்வர்கள் இவர்களை அண்டி வாழ்ந்தனர். ஆனல் சமய உணர்ச்சியை நிலைநிறுத்த அவதரித்த ஆசிரியர்களும் பெரியார்களும் அரசசபைகளை விடுத்து யாதொரு பலனும் உத்தேசியாமல் கடவுள் சேவையே கருதி பொதுநன்மைக்குப் பாடு பட்டார்கள். ஆகவே அன்னருக்கு அரசர் முதலியோர் ஆதரிப்பு அவசியமாய் இருக்கவில்லை. இந்த வகுப்பினைச் சார்ந்த மணிவாசகர், நாவுக்கரசர், பட்டினத்தார், தாயுமானவர் முதலிய பெரியார்களின் பிற்காலத்தில் இம்மகிமை பொருந்தின கைங்கரியம் அடையாத தமிழ்ப்புலவர்கள், தகுந்த அரசர் ஆதரவு இல்லாதவர்களாகிச் செல்வர்கள்பால் அண்டிப் பிழைக்கலானர்கள். அவர்கள் சிற்சில காலங்களில் ஆதரவு கிடையாமல் வறுமையடைந்து 'என் தமிழ்கற்றோம்' என்று வெறுக்கவும் ஆனர்கள். மன்னர்களும் க்ஷீணமடைய செல்வர்களும் நலிய, புலவர்களுக்கு ஆதரிப்பு இல்லாது போகவும் சில ஆண்டுகள் மதஸ்தாபனங்களான மடாதிபதிகள் ஆதரவில் புலவர்கள் வாழ்ந்து வந்தார்கள். திருவாவடுதுறை போன்ற சில பிரபல மடங்களில் மதசம்பந்தமான ஒருசாரார் புலவர்கள் தமிழுக்குத் தொண்டுபுரிந்தனர். இவ்வித ஆதரிப்பு இப்போது குன்றிப்போக, சர்க்கார் மதிப்பும் குறைந்து போக இனிப் புலவர்

களுக்கு என்ன ஆதாவு கிடைக்கும் என்பது யோசிக்கத்தக்க ஒரு சங்கதி ஆகும்.

செல்வவந்தர்களாலும் மன்னர்களாலும் முன்காலத்தில் அளிக்கப்பட்ட போற்றுதலும் ஆதரவும் குன்றிப்போய், பெரும் புலவர்கள் சாதாரணமான மானுடர்களை முகஸ்துதி செய்ய வேண்டிய காலமும் வந்து விட்டது என்று 1100-வருக்கு முன் இருந்த ஸ்ரீமத் சுந்தர மூர்த்தி சுவாமிகள் பாடல்களிலேயே புலப் படுகின்றது. அந்த இழிந்த நிலையைப் பழித்துக்கூறி இனிப் புலவர் களே ஈசனைத்தொழுது முன்னேறுங்கள் என்று இடித்திடித்துக் கூறியிருக்கின்றார் அப்புலவர் பெருமான்.

" தம்மையே புகழ்ந்திச்சை பேசினும்
சார்வினும் தொண்டர் தருகிலார்
பொய்ம்மையாளரைப் பாடாதே எந்தை
புகலூர்பாடுமின் புலவீர்காள் "

" மிடுக்கிலா தானை வீமனே விறல்
விசயனே வில்லுக் கிவனென்று
கொடுக்கி லாதானைப் பாரியே என்று
கூறினும் கொடுப்பாரில்லை. "

என்றும் கூறியபாடல்களின் கருத்து என்ன? அக்காலத்துப் புல வர் செய்கைகளை அவைகள் தெளிவாக விவரிக்க வில்லையா?

பிறகு 400-வருக்கு முன் இருந்த அருணகிரியாரும், மானிடர் மீது புலவர்கள் கவிபாடி இழிவடைந்ததைக் குறித்து அதனை வெறுத்துவிட்டு ஈசன் மீது திருப்புகழ் பாடும் படிக்கு வற்புறுத்தி யிருக்கிறார்.

" முந்து தமிழ்மாலை கோடிக்கோடி
சந்தமொடு நீதி பாடிப்பாடி
முஞ்சர்மனை வாசல் தேடித்தேடி—உழலாதே "　　(41)

" தருமர் இவர் ஆகும் என்று பொருள்
நசையில் நாடி வண்டு
தனைவிடு சொல்தூது தண்டம் முதலான
சரசகவி மாலைசிந்து கவித்துறைகள்
ஏசல் இன்ப

தருமுதல தான செஞ்சொல் வகைபாடி
மருவகையுமோதி நொந்து
அடிகள் முடியே தெரிந்து
வரிலுமிவர் வீதம் எங்கள் இடமாக
வருமதுவோ போதுமென்று ஒரு பணம்
உதாசீனம் சொல் மடையரிடமே
நடந்து மனம் வேருய்." (217)

"உடையவர்கள் எவர் எவர்களென
நாடி உளமகிழ ஆசு கவிபாடி
உமதுபுகழ் மேருகிரி யளவுமான
தென வுரமுமான மொழிபேசி
நடைபழகி மீள வறியவர்கள்
நாளை நடவுமென வாடி முகம் வேருய்." (237)

எனவும் பாடியிருப்பதினுல் அக்காலத்தில் புலவர்கள் மனிதரையும் பாடி அடைந்த கதி இன்னது என்று வெளிப்படையாய்த் தெரிகிறது.

இனிச் சமீபகாலத்துப் புலவர்களான இராமச்சந்திர கவிராயர் முதலியோர்.

"கல்லைத்தான் மண்ணைத்தான் காய்ச்சித்தான் குடிக்கத்தான் கற்பித்தானு இல்லைத்தான் பொன்னைத்தான் எனக்குத்தான் கொடுத்துத்தான் இரட்சித்தானு, அல்லைத்தான் ஆரைத்தான் நோவத்தான் இங்குத்தான் ஐயோ எங்கும், பல்லைத்தான் திறக்கத்தான் பதுமத்தான் புவியிற்ருன் பண்ணிஞனே."

என்று தம் நிலைமையை வெறுத்துப் பாடியதும் அறிந்திருக்கின்ருேம். இதனுல் மன்னர்களை அண்டியும் செல்வர்களை நாடியும் அவர்களைப் புகழ்ந்து ஜீவிப்பதனுல் தாமும் ஒன்றும் அகப்படாமல் இழிவடைவதோடு பாஷைக்கும் தேசத்திற்கும் அப்புலவர்கள் தொண்டு செய்வதில்லையாகும்.

ஆனுல் தாங்களும் பிழைத்து தேசத்துக்கும் பாஷைக்கும் தொண்டு புரிவதெப்படியெனில் ஏனைய தேசத்துப் பெரும் புலவர்கள் செய்த விதத்தை நாடுவதேயாகும். ஈசுவர சேவை குல சேவையே என்ற பொருள் கொண்ட "குதா மேஹர்பான் தோ குல் மிஹர்பான்" என்ற உருது பாஷையின் பழமொழிக்குத் தக்கபடி மக்கள் முன்னேற்றத்துக்குத் தகுந்த கவிகளைப்பாடிப் பொது

ஜனங்களுக்குச் சமர்ப்பித்தால் அப்போது மக்களே புலவர்களை ஆதரிப்பார்கள் அல்லவா? உண்மையான கவிகளாயிருந்தால் பொதுமக்கள் அவைகளைத் தாங்கி நிற்பர். பலர் அந்நூல்களை வாங்குவார்கள், படிப்பார்கள். ஊக்கமும் உற்சாகமும் பிறக்கும், ஆசிரியனுக்குச் செல்வமும் மதிப்பும் ஏற்படும். அதுவே ஈசுவரப் பிரீதிக்கும் காரணமாகும். இதை உத்தேசித்து நம் தமிழ்ப் புலவர்கள் காலப்போக்கை அனுசரித்து ஜனசேவை செய்ய முன் வந்து தனி மானுட சேவையை ஒழிப்பார்கள் என்று வற்புறுத்த வேண்டும்.

---

# பற்குச்சிகளின் பண்பு

(யாழ்ப்பாணத்து நவாலியூர் வடக்கு. க. சரவணமுத்து)

தும்பி முகவன் துணையடி யிரண்டும்
நம்பி நயந்து நாமகட் பரசிப்
பல்லுக் குறுதி பயந்திடு கொம்புகள்
சொல்லருங் குணங்கள் சொல்லுவன் கேண்மின்;
நற்கருங் காலிதி நாற்றங் கெடுக்கும்
சொற்பெறு புங்கு சித்திகள் கொடுக்கும்
வாகைநற் கல்வி வருக்க மீயும்
ஓகைசேர் ஆலுக் குண்டே.. வலுவே
நன்னு யுருவி நல்லெழில் வசியம்
மன்னு வணங்கு வந்தருள் செய்வாள்
மாசறு மாதுளை தேசுற வளிக்கும்
வில்வக் கொம்பர் செல்வ மளிக்கும்
பொல்லாக் கனவைப் போக்கிடும் சாதி
வாகை யின்னும் வயதருள் செய்யும்
மாகநீள் சூத முடல்நலம் வாய்க்கும்
இன்புள இலந்தை இனிப்பினை யுதவும்
முன்புண வேம்பு பல்லொளி முதிர்க்கும்
எருக்கிந் திரியம் பெருக்கு மென்பர்
பூனு மதுவே பொருத்து மென்பர்
ஆன்றோர் நவின்றன வறிந்து
என்றுமுறை கொள்ளின் இன்பமெய் திடுமே.

தென்னிந்திய தமிச்சங்கம் திருநெல்வேலி

# தனித்தமிழ்த் தேர்வுகள்

## தேர்ச்சி அறிக்கை

கடந்த ஆறு ஆண்டுகளாக ஆண்டுதோறும் ஆனித்திங்களில் தேர்வுகள் நடத்தித் தேர்ச்சியுற்றவர்கட்குத் தேர்ச்சியிதழ்களும் பரிசுகளும் வழங்கிவந்துள்ள தென்னிந்திய தமிழ்ச்சங்கத்தின் சார்பில் 1932 ஜூலை 21, 22, 23, மெய்கண்டான் யாண்டு எ௳சு ஆடித்திங்கள் சு, எ, அ ம் நாட்களில் சென்னை, திருச்சி, ஆரணி, திருநெல்வேலி, திருவாங்கூர் நாட்டுப் பதுமநாபபுரம், கொழும்பு, ஆகிய ஆறு தலைநகர்களிலும் அவ்வந் நகர்ப்பேரறிஞர் தலைமையிற் சிறப்பாக இவ்யாண்டுத் தேர்வுகள் நடைபெற்றன.

இவ்யாண்டு விண்ணப்பித்த மொத்த மாணவர்கள் இருபதின்மர். தமிழ்த்தேர்வுக்கு விண்ணப்பித்தவர் பதினைவர். இவர்களில் வந்தெழுதியவர் பதின்மூவர், தேர்ச்சியுற்றவர் அறுவர். இளந் தமிழ்ப்புலவர் தேர்வுக்கு விண்ணப்பித்தவர் இருவர். எழுதியவருந் தேர்ச்சியுற்றவருமிருவரே. தமிழ்ப்புலவர் பொதுவுக்கு விண்ணப்பித்தவர் மூவர். எழுதியவருந் தேர்ச்சியுற்றவரும் மூவரே.

தேர்ச்சியுற்றவர்கள் வகை அடியிற் குறிக்கப்பெற்றுள்ளது.

### தமிழ்ப்புலவர் பொது

#### முதல் வகுப்பு

1. பதிவெண் 11. பண்டித. ரா. சி. ராமசுப்ரமணிய நாவலர், 'செந்தமிழ் நிலையம்' பதுமநாபபுரம், திருவாங்கூர்.

#### மூன்றும் வகுப்பு

2. ,, 9. சண்முகம் நமசிவாயம், கிளார்க், டெலிகிராப் சீப் எஞ்சினீர் ஆபீஸ், கொழும்பு.

3. ,, 10. ம. ஜோசப் பாண்டியராஜ், தமிழாசிரியர், அர்ச். சவேரியர் கல்லூரி, பாளையங் கோட்டை.

## இளந்தமிழ்ப் புலவர்

### இரண்டாம் வகுப்பு

1, பதிவெண் 26 கவிநயம். பி. கந்தசாமி முதலியார், "சேயோன் நிலையம்" செங்குந்தர் தெரு, திருப்பத்தூர், வட ஆற்காடு ஜில்லா.

### மூன்றும் வகுப்பு

2. பதிவெண் 27 தி. மு. சோமசுந்தரம் பிள்ளை, தமிழாசிரியர், C. F. பாடசாலை, அருவங்காடு, நீலகிரி.

## தமிழ்த் தேர்வு

### இரண்டாம் வகுப்பு

1. பதிவெண் 90. S. வைத்தீஸ்வரம்பிள்ளை, வடக்குத்தெரு, இராஜாக்கள் மங்கலம், கோட்டாறு, திருவாங்கூர்.

2. ,, 87. K. A. குப்புசாமிபிள்ளை, தலைமையாசிரியர், போர்டு எலிமெண்டரி ஆண் பாடசாலை, பழங்கோவில், கலசபாக்கம் போஸ்டு, போளூர், வடஆற்காடு ஜில்லா.

3. ,, 94. S. ஆறுமுகம், திட்டிவாசல்தெரு, பதுமநாபபுரம், தக்கலைப்போஸ்டு, திருவாங்கூர்.

### மூன்றும் வகுப்பு

4. பதிவெண் 92. R. K. அரங்கன், தெற்குத்தெரு, இராஜாக்கள் மங்கலம், கோட்டாறு, திருவாங்கூர்.

5. ,, 85. K. S. வேங்கடேசையர், சந்தவாசல், ஆரணி, வடஆற்காடு ஜில்லா.

6. ,, 86. S. வீராசாமி ஐயர், சந்தவாசல், ஆரணி, வடஆற்காடு ஜில்லா.

7. பதிவெண் 81. ஆ. எட்வர்டு சாமுவேல் நாடார்; தலைமையாசிரியர், ஸ்ரீ அருணாசலேஸ்வரர் வித்தியாசாலை, முதலிபட்டி, துலுக்கபட்டி, P. O. சாத்தூர்த் தாலூகா, இராமநாதபுரம் ஜில்லா.

நமது தமிழ்ச்சங்கத்தேர்வுகளுக்கு வேண்டிய வினாத்தாள் குறித்தும் திருத்தியும் உதவிபுரிந்த சங்கத்தமிழ்ப்புலவர் குழு உறுப்பினர்கள் முதலிய அறிஞர்கட்கும், தேர்வுகளைக்குறித்த தலைநகர்களில் மேற்பார்த்த தமிழன்பர்கட்கும் சங்கத்தின் நன்றியறிதலை வணக்கத்துடன் தெரிவித்துக்கொள்கின்றேம். சங்கத்தனித் தமிழ்த் தேர்வுகட்குப் பல விடங்களிலிருந்தும் மாணவர்கள் நூற்றுக்கணக்காக வந்தெழுதித் தேர்ச்சியுற வேண்டுகின்றேம்.

தென்னிந்திய தமிழ்ச்சங்கம்
திருநெல்வேலி.
13-11-1932

அன்புள்ள
பு. சி. புன்னைவனநாதன்
அமைச்சர்.

---

# மதிப்புரை

## பல்பொருட் கட்டுரை.

இது காலஞ்சென்ற மணி. திருநாவுக்கரசு முதலியார் அவர்களால் அவ்வப்போது "செந்தமிழ்ச் செல்வி" "சித்தாந்தம்" முதலிய செந்தமிழ்ப் பத்திரிகைகளில் எழுதப்பட்டுவந்த உரைநடைக் கட்டுரைகளின் தொகுப்பாகும். சமயம், தத்துவம், இயற்கை, மொழிவரலாறு, நாட்டுப் பெரியார் என்ற பலதுறைகளையும் தழுவிப் பல கட்டுரைகளைக் கொண்டு விளங்குவதாகலின் இது பல்பொருட் கட்டுரை என்னும் பெயருடையதாயிற்று. மணி. திருநாவுக்கரசு முதலியாரைப்பற்றியாதல், அவர் தம் விழுமிய தமிழுரைநடையைப்பற்றியாதல் தமிழ்நாட்டார்க்கு எடுத்துக்கூறுதல் மிகையாகும். கல்லூரிகட்கும், கலாசாலைகட்கும் பயன்படும் இச் சிறந்த நூலைப் பாடபுத்தகமாக்கி மாணவர்களை நற்பயன் அடையச் செய்தல் பாடபுத்தகக் கமிட்டியாரின் கடமையாகும். இதன் விலை ரூபா ஒன்று. வேண்டுவோர் இம்பீரியல் அச்சுக்கூடம், 23, டேவிட்சன் தெரு, சென்னை என்ற விலாசத்திற் கெழுதிக் கொள்ளவும்.

